**Team Health Shoppe**
**For Wellness**

# இயற்கையே மருந்தாக ஆரோக்கியமே விருந்தாக

## டீம் தேங்காய் எண்ணெய்

....மற்றதைக் காட்டிலும் வித்தியாசமானது

குளிர்முறை தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப்பட்ட டீம் தேங்காய் எண்ணெய் ஆரோக்கியத்திற்கும், சமையலுக்கும் உகந்தது.




Source : extract of souvenir released at National Seminar on Augmentation of Coconut Products by Coconut development board (Ministry of Agriculture) Cochin on 12th Oct, 2003 at Hyderabad

தேங்காயிலிருந்து இயற்கையான முறையில் (hydrogenation heating மூலம் இல்லாமல்) சுகாதாரமாக எடுக்கப்படுகிறது. டீம் தேங்காய் எண்ணெய். இதனால் இயற்கையான மணமும், குணநலன்களும் சிறிதும் குறைவதில்லை.

- சத்துக்கான ஆதாரம் எளிய முறையில் ஜீரணிக்க உதவுகிறது.
- கொழுப்பு சேர்வதை தடுக்க உதவுகிறது சுறுசுறுப்புடனும் புத்துணர்வுடனும் வைக்க உதவுகிறது.
- நச்சுப் பொருட்கள் உள்ளே வருவதை தடு உதவுகிறது.
- ஆன்ட்டி பாக்டீரியல், ஆன்ட்டி வைரல் & ஆன்ட்டி பங்கல்.
- இதயத்துக்கு வலிமை சே உதவுகிறது.
- அழகு சாதனப் பொருட்களில் உபயோகப்படுத்தப்படுகிறது
- வெப்பத்தை தாங்ககூ சக்தியை தருகிறது
- சமையலுக்கு மிக உகந்தது.

### டீம் ஹெல்த் ஷாப்பின் இதர பொருட்கள்



- டீம் சோடியம் அல்லாத உப்பு • டீம் அரை உப்பு
- டீம் நல்லெண்ணெய் • டீம் தேங்காய் எண்ணெய்
- கற்றாழை - சருமம் மற்றும் மேனிப் பராமரிப்பு பொருட்கள்
- தேன் பொருட்கள் • டீம் எனர்ஜி வாட்டர்
- மரபு முறை, கைகுத்தல் உணவுப் பொருட்கள்
- கொடைக்கானல் மலை தைலம் • பனைப்பொருட்கள்





**TEAM EUBIO CARE**
(DIVISION OF CHEMFAB ALKALIS LIMITED)

**வண்டலூர் :** டீம் ஹவுஸ், சென்னை-48. 2275 0502

**அண்ணாநகர் :** பிளாட் 1200, சென்னை-40. 4269 3332

**அடையார் :** எண்.26, தரைதளம், இந்திரா ந சென்னை-20. 4269 5115

www.teamhealthshoppe.com • teamhealthshoppe@drraoholdings.com

ரூ.500க்கு மேல் வாங்குபவர்களுக்கு இலவச டோர் டெலிவரி (சென்னை

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...





கல்கி
நிறுவன வெளியீடு
தரம் நிரந்தரம்

# எல்லாம் நமக்காக!

மனத்தை நெறிப்படுத்தும்
தத்துவத் துளிகள்!



13.05.2007
இதழ்...

+16

# வட்டமேஜை

வித்தியாசம்னா பார்த்திபன். பார்த்திபன்னா வித்தியாசம். புதிய தொடரான 'ஜிகினா' ஆரம்பமே சுவாரஸ்யமாக மனதில் ஒட்டிக் கொண்டது!
**ஔவையார்பாளையம்**
**ஏ.எஸ்.யோகானந்தம்**

பலருக்கும் ஒதுக்கீடு அளித்த மகிழ்ச்சியில், துள்ளிக் குதிக்கும் கலைஞரின் கார்ட்டூன் மிக அருமை!
**கோ.புதூர், இரா.சக்கரபாணி**

'இப்படியும் நடக்குமா?' படித்து அதிர்ச்சியாக இருந்தது. பல நாட்கள் கரும்பு ஜூஸ் குடித்துள்ளேன். இருந்தாலும் படித்ததும் வயிற்றைப் பிசைந்தது.
**திருச்சி 14, ராஜிராதா**

'பெத்த மனசு' - ஆங்கரை பைரவியின் சிறுகதை, முதிய தாயின் மனவோட்டத்தைச் சிறப்பாக வெளிப்படுத்தியது.
**தூத்துக்குடி,**
**ஏ.ஜஹ்பர்காதர்**

கடவுள் ஆண்பாலா, பெண்பாலா என்ற கேள்விக்கு கிரேஸி மோகன் பதில் எல்லாவற்றுக்கும் அப்பால்!
**மும்பை - 37, உமரி.பொ.கணேசன்**

சீதாராம் எழுதிய 'வசியம்' சிறுகதையைப் படிக்கும்போதே எங்கள் மனம் வசியமாகிவிட்டது.
**சாலை அகரம், கா.சங்கர்**

திருநங்கை நர்த்தகி நடராஜின் தீர்க்கமான பேட்டி, நெகிழ்ச்சியாக இருந்தது. நியாயமான எதிர்பார்ப்பு.



நிச்சயம் வேண்டும் - அவர் போன்றோருக்கு நிரந்தரப் பாதுகாப்பு!
**கூத்தப்பாக்கம், வண்ணப்ரியன் மூர்த்தி**

**வி**ருதிகளைப் பற்றிய இணைப்பிதழ் அற்புதம்! வேலை தேடி வரும் இளம் பெண்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம்.
**சென்னை - 17, கோமளா ரங்கநாதன்**

**க**தை பண்ணாமல் சாதனை பண்ணுகிற ஜாக்கிகள்தான் இந்திய கிரிக்கெட் அணிக்கு உடனே தேவை என 'நச்'சென்று ஒரு போடு போட்ட உமது ஆலோசனைக்கு 1008 சபாஷ்!
**திருவண்ணாமலை, சாமி**

'**கா**த்திருக்கும் கண் நோய்கள்' உஷார் ரிப்போர்ட் நாற்பதை நெருங்கிய என்னைப் போன்றோருக்கு மிகுந்த பயனுள்ளதாக இருந்தது.
**பாளையங்கோட்டை, கே.மோகனசுந்தரம்**

'**தே**வமருந்து' பகுதியில் மல்லிகையின் மருத்துவக் குணங்கள் மலைக்க வைத்து விட்டன!
**சென்னை - 91, அய்யாறு வாசுதேவன்**

**தி**ருநங்கை நர்த்தகி நடராஜை அட்டையில் போட்டது திருநங்கைகளுக்கு கல்கி கொடுத்த கௌரவம்!
**பாளையங்கோட்டை, பி.சிவா**

**ச**ங்கரின் Exclusive பேட்டி அற்புதம். தமிழ்ப் பத்திரிகைகளிலேயே முதல் முறையாக வெளியிட்டு, துவம்சம் பண்ணிட்டீங்க!
**காட்பாடி, முருகுசுந்தரம்**

**தி**ருவண்ணாமலை விவசாயிகள், கரும்பு ஆலையின் பணப் பிரச்னையில் சிக்கித் தவிக்கிறார்கள் என்பதை கல்கி தெளிவாகத் தெரிவித்துவிட்டது.
**பாளையங்கோட்டை, கே.மோகனசுந்தரம்**

**பில் கேட்ஸ் தொடர்...**

**அடுத்த இதழில்...**





# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ்**
**பிரைவேட் லிமிடெட்டிற்காக**
**பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**
தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**
வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன், எம். மோகன், ச. கார்த்திகேயன்**
தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324
தொலைநகல் :
044 - 2225 1021
மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.440/-**
**ஆறு மாதம் : ரூ.220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : **65 யு.எஸ். டாலர்**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.**

தமிழக அரசியல் பார்வையாளர்களின் கவனம் இன்றைக்கு விருது நகரில்தான் குவிந்துள்ளது. அங்கு காமராஜருக்கு மணி மண்டபம் திறப்பதையொட்டி, தம் ஆயிரக்கணக்கான ரசிகர்களைத் திரட்டியிருக்கிறார் சரத்குமார். 'நாடார் இன மக்களை ஒன்று சேர்த்து ஜாதி இயக்கம் துவங்குவதற்கு பிள்ளையார் சுழி போடுகிறார் சரத்குமார்' என்பது போன்ற பேச்சுக்கள் துவங்கிவிட்டன. இந்த நிலையில் நாம் சரத்தைச் சந்தித்துப் பேசினோம்...

**காமராஜருக்கு மணி மண்டபம் கட்ட வேண்டுமென்ற எண்ணம் ஏன் ஏற்பட்டது?**

''பலரும் காமராஜ் ஆட்சி

# "தலைமை தாங்கத் தயார்!"



என்கிறார்களே தவிர, அவரது ஆட்சியில் என்னென்ன நல்ல காரியங்கள் நடந்தன என்று விரிவாகப் பேசுவதில்லை. 'அவரென்ன பொருளாதார மேதையா, கல்வியாளரா?' என்றெல்லாம் காமராஜரைக் கிண்டல் செய்தார்கள். ஆனால் அவரோ 'எனக்கு தமிழகத்தின் எல்லா கிராமங்களும் தெரியும். அவர்களின் தேவை என்ன என்பதும் தெரியும்' என்று அணைகளைக் கட்டினார்; கல்விப் புரட்சி செய்தார்; மத்திய உணவு கொண்டு வந்தார். அவர் ஒரு தீர்க்கதரிசி. அவர் முயற்சியால்தான் நாம் இன்று நம்

**"இன்றைக்கு அரசியல் மிகவும் கேவலமாகப் போய்க் கொண்டிருக்கிறது. படித்த இளைஞர்கள் அரசியலுக்கு வர மிகவும் தயங்குகிறார்கள். அந்த வகையில் ஒரு காலியிடம் இருக்கிறது."**

முடைய வளர்ச்சிக்குத் தேவையான கட்டுமானங்களை முழுதாகப் பெற்றிருக்கிறோம். ஆனால், அப்படிப்பட்ட பெருந்தலைவருக்குப் பெரிய அளவில் நினைவுச் சின்னம் இல்லை. இருக்கும் காமராஜ் மணி மண்டபமும், சரியான பராமரிப்பு இல்லாமல் இருக்கிறது. எனவே தான் அவரது புகழைப் பரப்பும் ஒரு முயற்சியாக விருதுநகரில் மணி மண்டபம் கட்டத் தீர்மானித்தேன்."

**நிறைய செலவாகுமே, எப்படிச் சமாளிப்பீர்கள்?**

"விருதுநகரில் இருபத்தைந்து ஏக்கர் நிலம் வாங்கியிருக்கிறேன். இது சரத்குமாரின் தனிப்பட்ட சொத்தாக இருக்காது. இதற்காக காமராஜ் பெயரில் அறக்கட்டளை அமைக்கப்பட்டிருக்கிறது. பெருந்தலைவர் மீது பற்று வைத்திருப்பவர்கள் உதவியுடன் கட்டி முடிக்கப்படும். நிதி ஒரு பெரிய பிரச்னை அல்ல."

**மணி மண்டபத் திறப்பு விழாவன்று திரளும் உங்கள் ரசிகர்களுக்கு நீங்கள் சொல்லப்போகும் செய்தி என்ன?**

"'வருங்காலம் பிரகாசமாக இருக்கிறது. உன்னைத் தயார்ப்படுத்திக் கொள். தாய் மொழியை நேசி, சுவாசி. அதே சமயம் ஆங்கிலம் உட்பட உலக மொழிகளைக் கற்றுக்கொள். நாளைய உலகம் உன் கையில்' என்பதே விருதுநகரில் திரளும் என் ரசிகர்களுக்கு நான் சொல்லப்போகும் செய்தி. பெருந்தலைவரை நாம் ஏன் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும் என்பது பற்றியும் விளக்கமாகச் சொல்வேன்."

**இந்த அறிவுரைகளுக்கும் மேலாக உங்களிடம் அரசியல் செய்தியை அல்லவா அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்...**

"இன்றைக்கு அரசியல் மிகவும் கேவலமாகப் போய்க்கொண்டிருக்கிறது. படித்த இளைஞர்கள் அரசியலுக்கு வர மிகவும் தயங்குகிறார்கள். அந்த வகையில்

# - சரத் அதிரடி

ஒரு காலியிடம் இருக்கிறது. அந்த இடத்தை நிரப்பி, அரசியலின் தரத்தை உயர்த்தும் பொறுப்பு, படித்த இளைஞர்களுக்கு இருக்கிறது. எனவே நாட்டின், குறிப்பாக தமிழகத்தின், எதிர்கால நலனை மனத்தில்கொண்டு படித்த இளைஞர்கள் அரசியலுக்கு வர வேண்டும் என்பதையும் வலியுறுத்துவேன். அந்த இளைஞர்கள் 'நீங்கள் தலைமை தாங்குங்கள்' என்று சொன்னால் 'முடியாது' என்று ஒதுங்க மாட்டேன். அப்படித் தலைமை தாங்கும் அமைப்பு பத்தோடு பதினொன்றாக நிச்சயம் இருக்காது."

**காமராஜர் பெயரில் நாடார் இன மக்களைத் திரட்டி அரசியல் செல்வாக்கு பெற நீங்கள் முயற்சி செய்வதாகப் பேசப்படுகிறதே...**

"தங்களுக்கென்று ஒரு கட்சியோ, தலைமையோ இல்லை என்று உணரும் சமுதாயம், அந்த வகையில் தம் எண்ணங்கள் நிறைவேறச் செயல்படுவதில் என்ன

தவறு இருக்கிறது? சரத்குமார் என்ற தனி மனிதன் நாடார் குடும்பத்தைச் சேர்ந்தவன்தான். ஆனால், நமது சமுதாய அமைப்பைப் பாருங்கள். ஒரு குடும்பம், பல குடும்பங்கள் கொண்ட கிராமம், நகரம், மாநிலம், நாடு என்று நன்கு பின்னப்பட்ட வலையாக நாம் இருக்கிறோம். இதில் அடிப்படையானது குடும்பம். அதுதான் கரு. அந்த அடிப்படையை நாம் மறுக்க முடியுமா, மறக்க முடியுமா? இந்த அடித்தளம் எனக்கு ஒரு பலத்தைக் கொடுத்திருப்பது உண்மைதான். இதைப் பயன்படுத்திக் கொண்டு சமத்துவம், சகோதரத்துவத்தை வளர்க்கும் விதமாகவே என் இயக்கம் இருக்கும்.''



**நீங்கள் என்னதான் சொன்னாலும் ஜாதிக் கட்சி என்ற முத்திரையைத் தவிர்க்க முடியாதே...**

"இதுவரை நூறு படங்களுக்கு மேல் நடித்துவிட்டேன். பொது வாழ்க்கையிலும் மக்கள் என்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். எந்த இடத்திலும், எந்த நேரத்திலும் ஜாதி, மத உணர்வுகளைத் தூண்டி நான் உயர நினைத்ததில்லை. இனியும் அப்படி நடக்கவும் மாட்டேன்.''

**காமராஜர் ஆட்சியைக் கொண்டு வருவேன் என்று சொல்லும் நீங்கள், காங்கிரஸில் இணைவது இன்னும் பொருத்தமாக இருக்குமே?**

''உண்மையாகச் சொல்லப்போனால், எனக்குள் ஒரு சுய ஆய்வு நடந்து கொண்டிருக்கிறது. நான் தி.மு.க.வில் பல காலமும், அ.தி.மு.க.வில் குறுகிய காலமும் இருந்திருக்கிறேன். அந்த அனுபவங்கள் எனக்குப் பல பாடங்களைச் சொல்லிக் கொடுத்திருக்கின்றன. வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்களில் தவறு செய்கிறோம். அந்தத் தவறுகள் எப்படி நடந்தன என்பதை சுய ஆய்வு செய்து கொள்ள வேண்டும். எனவே இன்றைய சூழலில் நான் எந்தக் கட்சியிலும் சேர்வது என்ற பேச்சுக்கே இடமில்லை.''

**மணி மண்டபத் திறப்பு விழாவுக்கு சோனியா காந்தி வராத நிலையில் இதில் ஏதேனும் அரசியல் இருப்பதாக நினைக்கிறீர்களா?**

"காங்கிரஸ் தலைவர் என்ற முறையில் சோனியா காந்தி அவர்களை விழாவுக்கு அழைத்தேன். உத்தரப் பிரதேச தேர்தலில் பிஸியாக இருப்பதால் வர இயலாத நிலையைச் சொல்லி, விழா வெற்றி பெற வாழ்த்தும் தெரிவித்தார். இதில் ஏதேனும் அரசியல் தலையிட்டிருந்தால், அவரை நான் சந்தித்ததையே தடுத்திருப்பார்களே?''

"காங்கிரஸ் தலைவர் என்ற முறையில் விழாவுக்கு அழைத்தேன். உத்தரபிரதேச தேர்தலில் பிஸியாக இருப்பதால் வர இயலாத நிலையைச் சொல்லி, விழா வெற்றிபெற வாழ்த்தும் தெரிவித்தார்."

**நடந்து கொண்டிருக்கும் கலைஞர் ஆட்சியைப் பற்றிய உங்கள் மதிப்பீடு என்ன?**

''இப்போது என்னுடைய கவனம் முழுவதும் விழா சிறப்பாக நடைபெற வேண்டும் என்பதிலேயே இருக்கிறது. வேறெந்த கருத்துக்களையோ, மதிப்பீடுகளையோ சொல்லும் காலம் வரும்.''

**- ப்ரியன்**

படம் : **ஸ்ரீஹரி**

ஓம்

ஸ்ரீகுருப்யோ நம:







ஓம் ஹ்ரீம் புவனேச்வர்யை நம:

**புதுக்கோட்டை**

**ஸ்ரீபுவனேச்வரீ ஸந்நிதியில்**

# ஒரு வருஷ சண்டீ ஹோமம் நிறைவு விழா

ஸர்வஜித் வருஷம், வைகாசி 11 வெள்ளி முதல் 18 வெள்ளி வரை

**(25-05-2007 to 01-06-2007)**

---

**வைகாசி 12 சனிக்கிழமை முதல் 13 ஞாயிறு வரை (26-05-07 to 27-05-07)**

**பரம பூஜ்ய ஸ்ரீசாந்தாநந்த மஹாஸ்வாமிகள் பக்தர்கள் மாநாடு நடைபெறும்.**

---

**வைகாசி 14 திங்கள் முதல் 18 வெள்ளி வரை (28-05-07 to 01-06-07)**

**தச லக்ஷ ஸ்ரீலலிதா நாம ஹோமம் நடைபெறும்.**

---

ஸ்ரீசாந்தாநந்த மஹாஸ்வாமிகளின் பக்தகோடிகள் அனைவரும் நிறைவு விழா நிகழ்வுகளிலும், மாநாட்டிலும் கலந்துகொண்டு குருவருளும், திருவருளும் பெற்று என்றும் இன்புற்று வாழ விரும்பிப்

**பேரன்புடன் அழைக்கின்றோம்.**

இங்ஙனம்

**பரமபூஜ்ய ஸ்ரீஓங்காராநந்த மஹாஸ்வாமிகளின்**

அருளாணைப்படி,

**விழாக்குழுவினர்**

- நன்கொடைகள் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- அழைப்பிதழ் வேண்டுவோர் தங்களது தெளிவான முகவரியுடன் கீழ்காணும் முகவரிக்குக் கடிதம் எழுத வேண்டுகிறோம்.

ஸ்ரீஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள் அதிஷ்டானம். கீழ 7 ஆம் வீதி, புதுக்கோட்டை - 622 001.

☎ 04322-221440 / 222128 e-mail:srisri_judge@sancharnet.in



# அழகான மணமகளே!

இந்தியா முழுவதும் ஆர்வ அலைகளை ஏற்படுத்திய அபிஷேக்பச்சன் - ஐஸ்வர்யாராய் திருமணம் வெகு விமரிசையாக நடந்து முடிந்துள்ளது. மும்பையில் பிரதிக்ஷா என்ற பெயர்கொண்ட அமிதாப்பச்சனின் பிரம்மாண்டமான பங்களாவில் நடந்த திருமணத்தில், வடஇந்திய வாசனை தூக்கலாக இருந்தாலும் தென் இந்திய மணத்துக்கும் குறைவில்லை. பிரதிக்ஷா வளாகமே மலர்களாலும், வண்ண விளக்குகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. வாயிலில் வாழை மரம், தோரண அலங்காரம் செய்யப்பட்டிருந்தன. முகூர்த்தத்தின் போது இந்து முறைப்படி காசியில் இருந்து வந்திருந்த புரோகிதர்கள் மந்திரங்கள் ஓதினாலும், அடுத்து அங்கே கர்னாடக சங்கீதம் முழங்கியது. மணமகன் அபிஷேக் வட இந்திய பாணியில் குதிரையில் ஊர்வலமாக வந்து இறங்கினாலும், திருமண மண்டப நுழைவாயிலிலிருந்து மணமேடை வரை தமிழக நாதஸ்வரமும், தவிலும் முழங்க அழைத்து வரப்பட்டார்.

தமிழகத்திலிருந்து சென்று திருமணத்தில் கலந்துக்கொண்டு பாடிய பாடகி கல்யாணிமேனன் (ஒளிப்பதிவாளர், இயக்குனர் ராஜீவ்மேனனின் அம்மா) இனம் புரியாத சந்தோஷத்தில் இருக்கிறார்.

“ஐஸ்வர்யா ராயை அவர் கட்டடக் கலை குறித்துப் படித்துக்கொண்டிருந்த, பிரபலமில்லாத மாடலாக இருந்த காலத்திலிருந்தே எங்களுக்குப் பழக்கம். அப்போது அவர் ராஜீவ் எடுத்த கடிகார விளம்பரத்தில் நடித்தார். 'கண்டுகொண்டேன்... கண்டுகொண்டேன்' படம் எடுத்த சமயம், ஐஸ்வர்யா எங்கள் குடும்பத்தில் ஒருவராகவே ஆகிவிட்டார். அபிஷேக்குடன் அவரது திருமணம் நிச்சயமானவுடன், 'ஆன்ட்டீ! எங்கள் முகூர்த்தத்தின் போது நீங்கள் கண்டிப்பாகப் பாட வேண்டும்; தமிழ்நாட்டு மங்கல இசை முழங்க வேண்டும்' என்று சொல்லி விட்டார்” என்று கூறும் கல்யாணிமேனன்,



# அமிதாப்பின் மருமகளே!

அபிஷேக் - ஐஸ்வர்யா திருமணம் பற்றிய சுவாரஸ்யமான தகவல்களை நம்முடன் பகிர்ந்துகொண்டார்...

"அமிதாப் பங்களா வளாகத்தில் மிக பிரம்மாண்டமான திருமண மண்டபத்தையே உருவாக்கி இருந்தார்கள். அதைப் பார்த்தால், தாற்காலிகமாக உருவாக்கப்பட்ட ஒன்று என்றே சொல்ல முடியாது. மொத்த மண்டபமும் குளிர் சாதன வசதி செய்யப்பட்டிருந்தது. திருமண மண்டபத்தின் இன்டீரியர் டெகரேஷன் எளிமையாகவும் அதே சமயம் உயர்ந்த கலை ரசனையுடனும் இருந்தது. எந்த ஒரு இடத்திலும் செல்வச் செழிப்பு வெளிப்படவில்லை. எத்தனை மணிக்கு என்ன நிகழ்ச்சி என்று அழகாகத் திட்டமிடப்பட்டு, அதன்படி எந்தவிதமான தடுமாற்றமும் இல்லாமல் நடத்தினார் அமிதாப். மும்பை போலீஸ் தவிர, தனியார் செக்யூரிட்டிகளையும் ஏற்பாடு செய்திருந்தார்கள். மண்டபத்தில் துல்லியமான ஒலிப் பெருக்கி ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பத்திரிகையாளர்களுக்கு உள்ளே அனுமதி இல்லை என்பதால், ஏராளமான மீடியாவினர் கேமராவும் கையுமாக வெளியில் காத்துக் கொண்டிருந்தார்கள். மொத்தமே, தேர்ந்தெடுக்கப்பட்ட இருநூறு பேர் மட்டுமே அழைக்கப்பட்டதாகக் கேள்விப்பட்டேன்.

மணமகன் அபிஷேக்குடன் அவரது சகோதரி ஸ்வேதாவின் மகன் அகஸ்டியாவும் குதிரையில் கூடவே அமர்ந்து வந்தான். அதற்கு சுமார் பதினைந்து நிமிடங்கள் கழித்து, அலங்கரிக்கப்பட்ட மணப் பெண்ணாக மிக அழகான ஒரு பல்லக்கில் ஐஸ்வர்யா வந்து இறங்கியபோது, உண்மையிலேயே ஒரு தேவதை வருவதுபோல இருந்தது. இரவு ஏழு மணிக்கு அபிஷேக், ஐஸ்வர்யா கழுத்தில் தாலி கட்டினார். அடுத்து மணமக்கள் மாலை மாற்றிக் கொண்டார்கள். நான் கணபதி ஸ்லோகத்தில் ஆரம்பித்து, வழக்கமாகத்

• கல்யாணிமேனன்





• மோகன்ராஜ்

தென்னிந்தியத் திருமணங்களில் பாடப்படும் பல்வேறு பாடல்களையும் பாடினேன். பரபரப்பான கல்யாண சூழ்நிலையிலும் நான் 'சீதா கல்யாண வைபோகமே' பாடியபோது, ஐஸ்வர்யா கண் மூடி ரசித்ததைப் பார்த்துப் பெருமிதமடைந்தேன். சுமார் ஒன்றரை மணி நேரம் பாடியிருப்பேன். நான் பாடி முடித்த பிறகு அமிதாப் என் அருகில் வந்து 'மேடம்! உங்கள் இசையின் மூலமாக இங்கே தெய்வீகம் கமழச் செய்து விட்டீர்கள். மிக்க நன்றி' என்று கூறிய போது, நெகிழ்ந்து போனேன்.

திருமண விருந்துக்கு மிக விரிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. ஸ்வீட் என்று எடுத்துக்கொண்டால், கான்பூரி லிருக்கும் ஒரு பிரபல ஸ்வீட் கடையிலிருந்து ஸ்பெஷல் லட்டு வரவழைத்திருந்தார்கள். ரைஸ் வெரைட்டீகளுக்கும் பஞ்சமில்லை. அசைவ உணவு தனியே ஒரு பகுதியில் இருந்தது. வந்திருந்த விருந்தினர்கள் ஒருவர்கூட சாப்பிடாமல் சென்றுவிடக் கூடாது என்று கவனமாக இருந்து, ஒவ்வொருவரையும் 'சாப்பிட்டாச்சா?' என்று விசாரித்துக்கொண்டே இருந்தார்கள்" என்று பரவசத்துடன் குறிப்பிட்டார் கல்யாணிமேனன்.

இந்தத் திருமணத்துக்கென்றே பிரத்யேகமாக அழைத்துச் செல்லப்பட்ட தமிழ்நாட்டைச் சேர்ந்த நாதஸ்வரக் குழுவில், மயிலை மோகன்ராஜ் (நாதஸ்வரம்), மயிலை முருகானந்தம் (நாதஸ்வரம்), ராஜரத்தினம் (தவில்), தட்சிணாமூர்த்தி (தவில்) ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். நாதஸ்வரக் கலைஞர் மோகன்ராஜ், ஐஸ்வர்யா ராய் - அபிஷேக் திருமணத்துக்கு மங்கல இசை வாசித்த அனுபவத்தை விவரித்தார்...

"கல்யாணி மேனன் அம்மா எங்களிடம் 'மும்பையில் ஒரு கல்யாணம்; பிளேன்ல கூட்டிக்கிட்டுப் போறோம்; வர முடியுமா?' என்று கேட்டபோது, எங்களுக்கு ஐஸ்வர்யா கல்யாணத்துக்குத் தான் வாசிக்கப் போகிறோம் என்பது தெரியாது. பேப்பர் மூலம்தான் எங்களுக்கே தெரிய வந்தது. திருமணத்துக்கு முதல் நாளே மும்பை சென்றுவிட்டோம். எங்களை அழைத்துக் கொண்டுபோய் பெரிய ஓட்டலில் தங்க வைத்தார்கள். திருமணத்தன்று பிற்பகல் காரில் கல்யாணம் நடந்த இடத்துக்கு அழைத்துச் சென்றார்கள். எங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடத்தில் அமர்ந்து சுமார் இரண்டு மணி நேரம் வாசித்திருப்போம். திருமணத்துக்கு வந்திருந்த டைரக்டர் மணிரத்னம் எங்களிடம் வந்து 'நன்றாக வாசித்தீர்கள்' என்று பாராட்டினார். அதேபோல பாராட்டிய இன்னொருவர் சச்சின் டெண்டுல்கர். முகூர்த்தம் முடிந்த கையோடு அமிதாப் வந்து பாராட்டினார்" என்றார் மோகன்ராஜ்.

**- எஸ்.சந்திரமௌலி**

**"கான்பூரிலிருந்து ஸ்பெஷலாக லட்டு வரவழைக்கப்பட்டது!"**

ரொம்ப நாளைக்கப்புறம் செம ஜாலியான, லவ்வான, பூத்தான ஒரு சப்ஜெக்ட். புதுமுகங்கள் போட்டி போட்டு நடிச்சிருக்காங்க. காதலோட அடிப்படை நம்பிக்கை. அது இல்லேன்னா காதலே காலியாயிடும்ங்கறது கதை. காதலனா வர்ற வினய்யோட முகபாவங்கள்ல யதார்த்தம் வீடு கட்டிக் குடியிருக்குது. சந்தேகப்பட்டே அவரைச் சாகடிக்கிற சதாவும் சாதாரணமான ஆள் இல்ல. புதுமுகமா மலர்ந்திருக்கிற தனிஷா (கஜோலின் தங்கையாமே!) குறும்புக் கவிதை. காதலனைப் பிரிக்கறதே தெரியாம பிரிச்சி, சதாவுக்கு ஷாக் கொடுக்கறது சத்தியமா இனிமை. தமிழ் சினிமாவுல இவருக்கு நல்ல இடம் காத்திருக்கு.

படம் முழுக்க ஆஸ்திரேலியாவோட அழகை வாரி இறைச்சிருக்காங்க. நகைச்சுவைக்கும் பஞ்சமில்லை. கதையோடு புகுந்து புறப்படுற காமெடிங்க நம்மைச் சுத்தி கலகலப்பா வலம் வருது. அதே மாதிரி நாயகன், நாயகிக்குமான காட்சிகளா வரிசைப்படுத்தாம, உலகக் காதலர்களுக்கான நிகழ்வுகளா படம் வளைய வர்றது சுகமான ஊர்வலம்.

ஹைக்கூ மாதிரி கதை சொன்ன ஜீவாவுக்கு ரோஜா பூங்கொத்து. திரைக்கதை செம ஸ்பீடு. 'நான் முந்தியா, நீ முந்தியா'ன்னு ஓவர்டேக் பண்ண முயற்சி செஞ்சி, கடைசில ரெண்டு பேருமே ஜெயிக்கறாங்க... யாரு? ஒளிப்பதிவாளரும் டைரக்டரும்... அட, ரெண்டுமே ஜீவாதாங்க. ஜில்லுன்னு ஒரு இசையைத் தந்திருக்கார் ஹாரிஸ் ஜெயராஜ். எல்லாப் பாட்டுமே மியூசிக்கல் ஹிட். பின்னணி இசையில குளிர் ஜாஸ்தி. பாடல் வரிகள் காதுக்கு இதம். எஸ்.ராமகிருஷ்ணனோட வசனங்கள் சிப்பிக்குள் முத்து. அளவா எழுதப்பட்டு, பொருத்தமா பயன்பட்டிருக்கு.

'மொழி' மாதிரி படங்கள் வரிசையில் தானா வந்து உட்கார்ந்துக்குது இந்த உன்னாலே உன்னாலே... கைதட்டி வரவேற்போம்.

# உன்னாலே உன்னாலே...





# மாயக்கண்ணாடி

'இளைஞர்களுக்கான தீப்பந்தம்'னு விளம்பரப்படுத்தும்போதே ஏதோ அட்வைஸ் பண்ணப் போறாங்கப்புன்னு புலம்பலோடதான் தியேட்டருக்குப் போறாங்க. உண்மைதான்... பிரசார நெடி தான் அடிக்கல... ஆனா, சேரன் செம அடி அடிக்கிறாரு. 'சினிமாவுக்கு வருவியா... வருவியா இனி.... ஒழுங்கா ஓடிப்போயிரு சொந்த ஊருக்கு...'ன்னு கனவோடு படம் பாக்கற, கோடம்பாக்கத்தை நம்பி வந்த குலவிளக்குகளான இளைஞர்களுக்குக் கோடரியைப் பரிசளிக்கிறாரு.

சொல்ல வந்த மெசேஜ்தான் ஒரு மாதிரின்னாலும் சொல்லப்பட்ட விதம் இருக்கே... அது பக்கா சேரன்தனம். காட்சிகளை அழகா பின்னி, சினிமா ஆசையோடு வந்தா எப்படியெல்லாம் சீரழிய வேண்டியிருக்கும்னு ஆவேசமா சொல்றாரு. கதை நாயகனா சேரன். பல இடங்கள்ல கண்களை குளமாக்கறார். ஆனாலும் அவரது நடிப்புல நாடகத்தனம் ஜாஸ்தி. டான்ஸெல்லாம் ரொம்பவே ஓவரு.

நல்லா பண்ணியிருக்காங்க நவ்யா. என்னமா பெர்ஃபார்ம் பண்ணுது இந்தப் பொண்ணுன்னு என் காதுபடவே பலர் பேசிக்கிட்டாங்க. எல்லாம் வீணுன்னு நினைக்கும்போது வருத்தமா இருக்கு.

உழைப்போட அருமையை உணர்த்தி, கொடுத்த கதாபாத்திரத்தை கச்சிதமா செய்திருக்கார் ராதா ரவி. சேரனோட அறை நண்பரா வரும் உமாபதி நடிப்பு ஆகாயம் தொடுதுன்னா, நவ்யாவோட அப்பாவா வர்ற வினோத்ராஜ் நட்சத்திரங்களைப் பறிக்க வந்து தர்றார்.

இதுநாள் வரைக்கும் நம்பிக்கையை மூலதனமா கொண்டு முன்னேறுங்கன்னு இளைஞர்களுக்குப் பாடம் சொல்லிட்டு, இப்போ கனவை விட்டுடுங்கன்னு சேரன் சொல்றது பெரிய முரண்பாடு. ரூட்டை மாத்தியிருந்தாலும் அண்ணன் சாட்டையைச் சரியா சுழற்றியிருக்கணும். இளையராஜா இசையில் பாடல்கள் சுமார்தான். ஆனா, துவாரகநாத்தின் கேமரா கோணங்களுக்குத் துடிப்பு ஜாஸ்தி.

மக்கள் தன்கிட்ட என்ன எதிர்பார்க்கறாங்கன்னு மாயக் கண்ணாடி மூலம் சேரன் நல்லா உணர்ந்திருப்பார். அதுக்காவது பயன்பட்ட இந்தக் காலக் கண்ணாடிக்கு சேரன் நிச்சயமா நன்றி சொல்லியே ஆகணும்!

- லஜ்ஜாவதி



# கல்கி

2007 மே 6
சர்வஜித் சித்திரை 23
மலர் : 65
இதழ் : 40

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## வீராசாமியின் வாதமும் கதாரா விவகாரமும்!

சட்டசபை சபாநாயகர் ஆவுடையப்பனுடைய உதவியாளர் எழுதிய சிபாரிசுக் கடிதத்துக்கும் பா.ஜ.க. எம்.பி பாபுபாய் கதாரா விவகாரத்துக்கும் சம்பந்தம் இருக்கிறது என்று சொன்னால், மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சு போடுவதாகவே தோன்றும்.

ஆனால், ஆவுடையப்பனின் உதவியாளர் இழைத்தது போன்ற சிறு சிறு அதிகார துஷ்பிரயோகங்கள்தான் ஆரம்பப் படிகள். அதிகார துஷ்பிரயோகத்திலிருந்து ஊழல், அதிலிருந்து இலஞ்சம், அதிலிருந்து கிரிமினல் குற்றங்கள் என்று சங்கிலித் தொடரான தப்புக் காரியங்களுக்கு வழி வகுக்கப்படுகிறது. இன்னும் சொல்லப்போனால், தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் ஆதாயங்கள் கிட்டும் வகையில் அதிகார துஷ்பிரயோகங்கள் செய்வதுதான் இன்றைய அரசியல் நடைமுறை. பெரும்பாலான அரசியல் வாதிகள் இதனைத் தங்கள் உரிமையாகவே கருத ஆரம்பித்து விட்டார்கள்!

அரசியல்வாதிகள் சார்பாக, ஆர்க்காடு வீராசாமியிடமிருந்து இதற்கு ஒப்புதல் வாக்குமூலமே கிடைத்துவிட்டது! தமிழக சட்டசபை சபாநாயகர் ஆவுடையப்பனின் உதவியாளர் எழுதிய சிபாரிசுக் கடிதம் குறித்து, சமீபத்தில் தமிழக சட்ட சபையில் விவாதம் எழுந்திருக்கிறது. அதையொட்டி, தம்மைப் போன்ற அமைச்சர்களும், எம்.எல்.ஏ.க்களும் தினமும் கண்ணை மூடிக்கொண்டு சிபாரிசுக் கடிதங்களில் கையெழுத்துப் போடுவதாகப் பேசியிருக்கிறார் ஆர்க்காட்டார். "இப்படியே போனால், உங்களுக்கே தெரியாமல் உங்கள் ராஜி






னாமா கடிதத்தில் ஒரு நாள் கண்ணை மூடிக்கொண்டு நீங்கள் கையெழுத்துப் போட நேரும்'' என்று தயாநிதி மாறன் எச்சரித்ததாகவும் வீராசாமி வெளிப்படையாகத் தெரிவித்திருக்கிறார்.

ஒரு மூத்த அமைச்சர், எந்த தைரியத்தில் இதைப் பெருமைக்குரிய விஷயமாகவோ அல்லது சர்வ சாதாரண விஷயமாகவோ பறைசாற்றுகிறார் என்பதுதான் நமது வேதனைமிக்க கேள்வி! அதிலும் சக கட்சிக்காரர் மீது எழுப்பப்பட்ட குற்றச்சாட்டை மறுக்கும் முகமாக இவ்வாறு பேசியிருப்பது அதிர்ச்சியுடன் ஆழ்ந்த கவலையையும் ஏற்படுத்துகிறது-இந்த நாட்டின் எதிர்காலத்தைப் பற்றிய கவலை!

ஆவுடையப்பனின் தனி உதவியாளர், 'பார்' நடத்த ஒப்பந்தத்துக்கு விண்ணப்பித்த ஒருவரைச் சிபாரிசு செய்து, சபாநாயகரின் லெட்டர்ஹெட்டைப் பயன்படுத்திக் கடிதம் அனுப்பியதாகக் குற்றம் சாட்டியிருக்கிறார் ஓ.பன்னீர் செல்வம். அதுகுறித்துச் சபாநாயகரின் விளக்கத்தையும் கோரியிருக்கிறார். ''சபாநாயகர் பேரில் குற்றமில்லை; அவரது உதவியாளர் கடிதம் அனுப்பியதற்கு அவர் பொறுப்பாக முடியாது; மேலும், அந்தக் கடிதம் சிபாரிசு செய்த நபருக்கு ஒப்பந்தம் அளிக்கப்படவுமில்லை'' என்பது வீராசாமியின் வாதம்! சபாநாயகரின் உதவியாளர் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்பதற்கு விளக்கம் இல்லை.

அப்படியானால், யாருக்கு வேண்டுமானாலும் சிபாரிசுக் கடிதம் தருவது பதவியிலிருப்பவர்களின் உரிமை என்றல்லவா ஆகிறது! இது அதிகார துஷ்பிரயோகம் அல்லாது வேறென்ன?!

யாருக்கேனும் அநீதி நடந்தால், அதைச் சீர்செய்ய மட்டுமே பதவியில் உள்ளவர்கள் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தலாம். அத்தகைய சிபாரிசுகள் நியாயமானவை; பாராட்டுக்குரியவை.

தகுதியற்றவர்களுக்கு முறைகேடாக வாய்ப்புகள் கிடைக்க சிபாரிசு செய்வது அதிகார துஷ்பிரயோகம் மட்டும் அல்ல; சமுதாயத்தின் வளர்ச்சியையும் வளத்தையும் முடக்கும் பாபச் செயல். இதனை உணரும் நல்லறிவுகூட இல்லாத நிலைக்கு நம் அரசியலும் அரசியல்வாதிகளும் தாழ்ந்து போயிருப்பது கொடுமையிலும் கொடுமை! ○

# புதுக்கோட்டையிலிருந்து ஒரு ஃபோன்!

'எல்லாம் உங்க ரெண்டாவது பையன் பொறந்த நேரம். இதுவரைக்கும் நீங்க பட்ட கஷ்டமெல்லாம் பறந்துபோற நல்ல நேரம் வந்தாச்சு!'ன்னு அந்த டொய்ங் டொய்ங்காரன். (குறி சொல்பவன் - தலையைவிட பெரிய பாகை, நெற்றியைவிட பெரிய நாமம், கையில் தம்புரா போன்ற ஒரு கருவி, அதன் நரம்பினில் நகம் சுரண்ட சுரண்ட வரும் அந்த டொய்ங் டொய்ங்) தெலுங்கோடு தமிழையும் வாயில் போட்டு அரைகுறையாய் அரைத்தபடிச் சொல்லச் சொல்ல, எங்க அம்மாவுக்குத் தன் மகன் சான்றோனாய் ஆகப்போகிறான் என்ற சந்தோஷம் ஈன்ற பொழுதிலேயே கிடைத்தது.

அந்த யோக ஜாதகன் பெயர் 'சந்திரசேகர்'. செல்லமாய் 'பாபு'. செல்லமாய்ப் பெயர் வைக்கக் காரணங்களாகச் சில இருந்தன. சாதகமாய் ஜாதகம், கேசமும் சுருள் சுருளாய், முதல் பையனை விட நிறமும் அழகும் கூடுதலாய்!

இப்பக்கூட யாராவது என்கிட்ட 'உங்க கூடப் பொறந்தவங்க எத்தனை பேரு?'ன்னு கேட்டா, ''கூட யாரும் பொறக்கலை. நாலு வருஷம் கழிச்சு என் அம்மாவுக்கு ஒரு பையன் பொறந்தான். அதனால அவன் பேரு தம்பி''ன்னு சொல்லுவேன்.

நான் பொறந்தப்ப ராசி + அம்ச சக்கரத்துல எந்தெந்த வீட்ல என்னென்ன கிரகம் இருந்ததுன்னு தெரியாது. ஆனா எங்க வீட்ல மட்டும் தரித்திரம் உள்வாடகைக்குக் குடியிருந்ததாச் சொல்லுவாங்க. துக்க தேசத்திலும், துரதிர்ஷ்ட தோஷத்திலும் பொறந்த என்னை அடிச்சுத் தொவைச்சு, வெளுத்து வளர்த்தாங்க. பெத்தவங்களைச் சொல்லித் தப்பு இல்ல. இல்லாமையும், இயலாமையும் புணரும் போது பொறக்குற வெறுப்போட வெளிப்பாடுதான் அது.

தம்பிக்கப்புறம், வளமையா இருந்த வறுமையோட புகழ் கொறைஞ்சிட்டதால வீடே குதூகலமாயிடுச்சு.

'நேரம்' பத்தி இவ்வளவு நீண்ட நேரமா ஏன் எழுதறேன்னு கொஞ்ச நேரம் படிச்சதுக்கப்புறம் புரியும். என்னைவிட என் தம்பி பத்து மடங்கு புத்திசாலி. எனக்கு இப்படிக் கொஞ்சம் கஞ்சத்தனமான பெருந்தன்மைதான் உண்டு.

ஒரு கார்ப்பரேஷன் ஸ்கூல்ல நாலாங் கிளாஸ்ல என்னையும், ஒண்ணாங் கிளாஸ்ல என் தம்பியையும் சேர்க்கறதுக்காக என் அப்பா கூட்டிட்டுப் போனாரு. சுற்றுப்புறச் சூழலைப் பத்தியெல்லாம் அக்கறைப்படுற அளவுக்கு என்னோட தாழ்வு மனப்பான்மை எடம் கொடுக்காததுனால, ஸ்கூல்ல சேத்துவிட்டா போதும்னு- 'உள்ளேன் ஐயா'ன்னு கையைத் தூக்கிட்டு உள்ளே போய் உக்காந்துட்டேன். 'உள்ளே வரமாட்டேன்; இந்த ஸ்கூல் பிடிக்கலே'ன்னு என் தம்பி முகம் சுளிச்சதுனால, துர்கா மான்டிஸோரி ஸ்கூல் – நீல நிறக் கால்சட்டை, வெள்ளை காலர் வழியா நீண்டிருக்கிற 'டை'யோட, அலுமினியப் புத்தகப் பெட்டி கையோட அவர் டிப்டாப்பா ஏபிசிடிக்குள்ள நொழைஞ்சுட்டாரு. அழுத பிள்ளைக்

ரா.பார்த்திபன்



குத்தானே ஆவின் மில்க்!

**நா**ன் சேர்ந்த கார்ப்பரேஷன் ஸ்கூல்ல டீச்சரெல்லாம் நல்லாப் படிப்பாங்க. வாராந்தரி ராணி, குமுதம், விகடன் உட்பட ஒண்ணு விடாமப் படிச்சுட்டு, பரீட்சையில கேள்விக்குக் கீழே அவுங்களே பதில் எழுதி - அவகாசம் கொடுத்து அழிச்சுடுவாங்க. காப்பியடிக்கத் தெரிஞ்ச மாணாக்கர்கள் பாஸாயிடுவாங்க. அந்த லிஸ்ட்ல நானும் பாஸாயி, அதே துர்கா மாண்டிஸோரியில ஐந்தாம் வகுப்புக்குள்ள நுழைஞ்சு, அங்கதான் ஏபிசிடியே கத்துக்க ஆரம்பிச்சேன். இங்கிலீஷைப் பொருத்தவரைக்கும் என் தம்பிதான் சீனியர்.

ஒரு தடவை தம்பிக்குக் கால் வலின்னு டாக்டர்கிட்ட கூட்டிட்டுப் போனோம். 'என்னப்பா'ன்னு டாக்டர் தமிழ்ல கேட்டதுக்கு, 'My leg is.... no... my knee is paining'-ன்னு தைரியமா சொன்னதுக்காக டாக்டர் பாராட்டினார். அப்பா ஆனந்தப்பட்டார்; நானோ ஆச்சர்யப்பட்டேன்- ஐந்தாம் வகுப்பில் எனக்குத் தெரியாத இங்கிலீஷெல்லாம் இவனுக்கு இரண்டாம் வகுப்பிலேயே தெரியுதேன்னு.

எனக்கு எங்க அப்பாவைப் பிடிக்கும். அப்பாவுக்கென்னவோ பாபுவைத்தான்

ரொம்பப் பிடிக்கும்.

எனக்கும் பாபுவுக்கும் சேர்த்து, தேர்வு முடிவைத் தெரிந்துகொண்டு வீட்டுக்குள் நுழைந்தேன். ஃபெயில் ஆன செய்தியை நான் சொல்வதற்குள் என் அழுகை சொல்லிவிட்டது. அவ்வளவுதான்... என் கன்னத்தை நோக்கி என் அம்மாவின் கைகள் விரைந்து வந்தன. 'ஒழுங்காப் படி, ஒழுங்கா படின்னு சொன்னேனல்ல'- ரேகை பதியும் முன் வேகமாய்ச் சொன்னேன்,

"நான் பாஸாயிட்டேம்மா."

"அப்புறம் ஏன் அழுத?"

"தம்பிதான் ஃபெயிலு."



அதிர்ச்சிக்குப் பின் அமைதி நிலவியது.

அப்பாவின் அதிரடி முயற்சியால் Re-Exam எழுதி பாஸானான்.

இன்ஜினியர் ஆக வேண்டுமென்று பிளான் போட்டு வைத்திருந்த என் எதிர்காலத் திட்டத்தில் Elevation-கூட எழுப்ப முடியாமல், எல்லா Side view- களிலும் பிரச்னைகள் Set square உடனும், தடங்கல்கள் T-square உடனும் படையெடுக்க, நான் படிப்பை நிறுத்திவிட்டு, நாடகக் கொட்டகைக்குள் அரங்கேறினேன்.

ஆனால் என் தம்பி, குடும்பம் பட்ட பாட்டையெல்லாம் கருத்தில் கொள்ளாமல் தன் பட்டப்படிப்பை முடித்தது பாராட்டுக்குரியது. கோத்ரேஜ் கம்பெனியில் அவன் வேலைக்கமர்ந்ததில், எங்கள் வீட்டு அடுப்படி தன் அடிப்படை வசதிகளைப் பெருக்கிக் கொண்டது.

நாடகத்தில் நான் ராஜா வேஷம் போட்டுக்கொண்டே நிஜத்தில் பிச்சைக்காரனாய்த் திரிந்தபோது, என் தம்பி 'டை' கட்டியபடி சம்பாதித்தது பெருமையாகவும், பொறாமையாகவும் இருந்தது.

சினிமாவில் எனக்கு ஒரு வாழ்க்கை கிடைக்காதா? அட்லீஸ்ட் ஒரு வாய்ப்பாவது... என ஒழுக்கமாக வேண்டியவர்களில் அவனும் ஒருவன். என் முதல் படம் வெளிவந்து வெற்றி என்னிடம் ஆட்டோகிராஃப் வாங்கிக் கொண்டிருந்த போது குழம்பி, வெதும்பி விரோதியானவர்களில் அவன் முதல்வன். ஆனால், அவனுக்கு மட்டும் அந்த உரிமை இருந்தது. காரணம், அவன் என்னைவிட புத்திசாலி, சுருள் முடி, யோக ஜாதகன்... எனக்கே வெள்ளி விழாவும், தேசிய விருதும் என்றால் அவனுக்கு...?

அவனுக்குப் பழுக்கப் பழுக்க புகை போட்டு என் எதிரிலேயே எனக்குத் தெரியாத எதிரியாக்கி நிற்க வைத்தனர் என் வெற்றியால் பாதிக்கப்பட்ட என் நண்பர்கள்.

நீட்டிக்கிட்டிருந்தாத்தானே ஈட்டின்னு தெரியும். குத்த முற்பட்டால்தானே தடுக்க முடியும். கண்ணுக்குப் புலப்படாத மாயமாய், இன்னும் சொல்லப் போனால் வெண்ட்ரிக்கிள், ஆரிக்கிள் இரண்டு அறைகளிலும் பதுங்கியிருந்து இதயத்தைத் தாக்கிக்கொண்டிருக்கும் கிருமிகளாய் எதிரிகள் செயல்படுவதை நான் உணர்வதற்குள்ளாகவே அவர்கள் மறையத் தொடங்கி விட்டார்கள்.

அதன் படைத் தலைவனாய் என் தம்பி. தம்பியுடையான் படைக்கு அஞ்சானாம்! நீண்ட பெருமூச்சில் அமர்ந்து கொண்டு யோசித்துப் பார்க்கும்போது, ஆளுக்கொரு நியாயமான காரணம், அடுத்தவருக்குத் துரோகம் செய்ய அழுத்தமாய் இருக்கிறதோ என்றே தோன்றுகிறது.

எனக்கு அவன் விரோதி என்றால், அவனுக்கு நான் மட்டும் என்ன விருந்தாளியா? எவ்வளவு வருத்தம் என் மீது அவனுக்கும் இருக்கலாம் அல்லவா?

சமீபத்தில் ஒரு செய்தியில், நூற்று அறுபது அடியில் இருந்த நீர் மட்டம் இருபது அடியாகக் குறைந்தபோது பழங்காலக் கோயில் ஒன்று நட்ட நடுவில் படுத்திருந்ததைக் கண்டுபிடித்திருப்பதாகக் காட்டினார்கள். வடிந்து பார்க்கும்போது ஏதோ ஒன்று புதிதாய்த் தென்படுகிறது. அப்படி என்றாவது ஒரு நாள் ரத்தம் சுண்டிய பருவத்தில் என்கூடப் பிறந்தவனோடு பகிர்ந்து பேசலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். பாருங்கள்! நினைத்துக் கொண்டிருக்கிறேன் என்று எழுதாமல், நினைத்துக் கொண்டிருந்தேன் என்று இறந்த காலத்தில் எழுத வேண்டிய கட்டாயம் எனக்கு ஏற்பட்டுவிட்டது.

சில வருடங்களாகவே தனக்குக் கெட்ட நேரம் என்று கூறிக்கொண்டே நேரங்கெட்ட நேரத்திலெல்லாம் குடித்துவிட்டுத் தன்னைத்தானே அசிங்கப்படுத்திக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டு வருந்தினேன்.

> “
> என்றாவது ஒரு நாள் ரத்தம் சுண்டிய பருவத்தில் என்கூடப் பிறந்தவனோடு பகிர்ந்து பேசலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்!
> ”

மதிகெட்டு அலைவதற்கு விதியென்ற நொண்டிச் சாக்கு. தவணை முறை மயானம்தானே! வரட்டும் பேசலாம். பதினோராம் மாதத்தில் இருந்தே அவன் பிறப்பை சற்றே ஞாபகப்படுத்தி... “நல்ல நேரத்தில் பிறந்தவன் நீ. நடுவில் நேரம் ‘கெட்ட’ நடனமாடினாலும் முடிவில் நீ நிச்சயம் ஜெயிப்பாய்” என்று உத்வேகப்படுத்த, வரட்டும் பார்க்கலாம் என நினைத்திருந்தேன். பார்க்கவில்லை - பத்து மாதங்களாய்; வரவேயில்லை இந்த நிமிடம் வரை.

‘காணவில்லை’ விளம்பரம்கூட எங்க அம்மாவின் கண்ணீருக்கு பிளாட்டிங் பேப்பராய்த்தான் பயன்பாடானது.

கடைசியாக அவன் சென்ற இடத்தைப் போலீஸுக்குத் தெரியப்படுத்தினோம். இரண்டு நாட்கள் கழித்து அந்த இன்ஸ்பெக்டர் பேசினார்: ‘சார், நீங்க சொன்ன மாதிரி எல்லா இடத்திலேயும் தேடிட்டோம். பாண்டிச்சேரி முழுக்க, மார்ச்சுவரி உட்பட.’

“மார்ச்சுவரியா? அதுதான் கடைசியாகச் சென்ற இடமா? அப்படியானால்?” சென்ற மாதத்தில் ஒரு நாள் அம்மாவுக்குத் தொலைபேசியில் யாரோ பெயர் சொல்ல விரும்பாத நபர் - ‘நான் புதுக்கோட்டையிலிருந்து பேசறேன். இனிமே உங்க பையனைத் தேடாதீங்க. அவன் தற்கொலை பண்ணிக்கிட்டான்’ - எனக் கூறித் தொடர்பைத் துண்டித்து விட்டாராம்.

உறவை எப்படித் துண்டிப்பது?
எங்கே அவன்?
இருப்பானா இப்போது?
இல்லையா, ‘அது’ எப்போது?
சிலர் வாழ்க்கை முடியாமல் முடிந்து விடுகிறதா?
நினைத்துக்கூடப் பார்க்க முடியாமல்... இப்படி எழுதிக் கொண்டிருப்பதை முடிக்கக்கூட முடியாமல்...

(மீண்டும்)



• தம்பியுடன்...

# எதிர்வீட்டுத் திண்ணை

தஞ்சாவூரில் வீடு மாற்றுவதென்பது 'பிரம்மனுக்கே சவால்' விடுக்கும் மனிதப் பிரயத்தனம்... சந்துகளுக்குள் வண்டி நுழையாது. அக்கம்பக்கத்தில் கொஞ்சம் பெரிய சந்தில், பலரது வசை மழைக் கிடையில் வண்டியை நிறுத்திவிட்டுச் சாமான்களைத் தூக்கித்தான் வர வேண்டும்... நாங்களும் ஒரு சந்திலிருந்து இன்னொரு சந்துக்கு இன்றுதான் வீடு மாற்றியிருந்தோம்...

'செட்டில்' ஆன மூன்றாவது நாள்... கண்காணிப்பு பலப்பட்டுத் தீவிரமாக விரித்த வலையில் 'பட்சி' சிக்கியே விட்டது.

"அம்மா..."

"ஏண்டா..." கையில் பிழிந்துகொண்டிருந்த துணியோடு ஓடி வந்தாள்.

"அந்த எதிர்வீட்டுப் பெரியவர் நம்ம ஜன்னல் பக்கச் சாக்கடைலதாம்மா 'எல்லாமே' பண்றார்..."

"வாயைப் பொத்துடா..." பதறினாள் அம்மா.

"புதுசா ஒண்ணுமே இல்லடா. காலங்காலமா நடக்கறதுதான். மருமக வச்சதுதான் சட்டமாம். பெரியவரை உள்ளே விடவே மாட்டாளாம். டீச்சராம்... டியூஷன் வேற எடுக்கறாளாம். மழைலயும் குளிரிலயுங்கூட அவர் திண்ணைலதான் கெடக்கணுமாம்... அந்தக் காலத்துல வெண்ணாத்தங்கரைப் பக்கத்துல நெலம் நீச்செல்லாம் இருந்துச்சாம். பொண்டாட்டி போயி பதினஞ்சு வருஷம் ஓடிடுச்சாம்..."

எதிர்வீட்டுத் தாத்தா இதயத்தின் மூலை ஒன்றில் ஒட்டுண்ணியாகக் குடியேறி, திண்ணையைக் கவனிப்பது தினமும் எனக்கு ஒரு வேலையாயிற்று. இரவு எட்டு மணிக்கு எதிர் வீட்டு வாசல் கதவு திறக்கும். வெளிப்படும் பெண்மணிதான் மருமகளாக இருக்க வேண்டும். ஒரு தொண்டைச் செருமல். தொடர்ந்து தட்டு ஒன்று தரையைக் குட்டும் ஒலி. மீண்டும் வாசல் கதவு சாத்தப்படும். மாதத்தில் சில நாட்களே விழித்துக்கொள்ளும் மூன்று வீடுகளுக்கு அப்பாலிருக்கும் தெருவிளக் கொளியில் சாப்பிட்டுவிட்டு, சின்ன குண்டான் ஒன்றில் தண்ணீர் எடுத்துத் தாத்தா கொப்பளிப்பது கேட்கும்... ராத்திரி பத்து மணிக்கு மேல் ஸ்கூட்டர் புலம்பல் தட்தட் என ஓயும். அதுதான் பிள்ளையாக இருக்கவேண்டும். கதவைத் தட்டிவிட்டு தாத்தாவின் தட்டை எடுத்துக்கொண்டு உள்ளே மறைந்துவிடுவார் அந்த ஆள்.

கொஞ்ச நாளிலேயே தாத்தாவுக்கு நான் நெருக்கமாகிவிட்டேன். கிழிந்து, உயிரை அழுக்கிலே பிடித்துக்கொண்டிருக்கும் துணியுடனான மர ஈஸிசேர், கறுத்துப் போன சின்ன தண்ணி குண்டான், ஃப்ரேம் போடாத அவர் மனைவி விசாலாட்சிப் பாட்டியின் கறுப்பு வெள்ளை ஃபோட்டோ, தாத்தாவின் வல நெற்றி மேடு மிளகு மச்சம், இடப்புறம் ஆயுள் ரேகை வடிவத்தில் கிறல் விழுந்த மூக்குக் கண்ணாடி என... எல்லாமே பழகியிருந்தன. நல்லது கெட்டது ஒன்று விடாமல் மாத வருஷ விவரங்களோடு தாத்தா என்னிடம் கதை சொல்வார்.

அன்று காலை வேளையானதால் எதிர்வீட்டுக் காட்சிகள் தெளிவாகவே தெரிந்தன.

"கொஞ்சம் எண்ணெய் வேணும்மா..." தாத்தா என் வீட்டுப் படியேறி வந்தார்.

"இன்னிக்கு விசாலாட்சியோட திதி.

**"மருமக வச்சதுதான் சட்டமாம். பெரியவரை உள்ளே விடவே மாட்டாளாம். மழைலயும் குளிரிலயுங்கூட அவர் திண்ணைலதான் கெடக்கணுமாம்!"**



வெளக்குப் போடணும்மா.."

அப்போது வீட்டுக்குள்ளிருந்து வெளிப்பட்ட மருமகள் தெருவில் இறங்கி மறைந்து விட்டாள். எண்ணெய் வாங்கிக் கொண்டு தாத்தா எப்போதும்போல சென்று ஈஸிசேரில் மல்லாந்துவிட்டார்.

இதனைக் கவனித்துத் திரும்பிய வேகத்தில் அம்மா மீது மோதிக் கொண்டேன். அதை சட்டை செய்யாத அம்மா, பேச ஆரம்பித்துவிட்டாள்...

"புள்ளயும் மருமகளும் செருப்பக்கூட உள்ள கொண்டு போயிதான் போட றாங்கடா... ஆனா வெளிலயே கெடக்கற மனுஷன் செருப்புக்கும் கேவலமாப் போயிருச்சு பாரு..."

'இது வன்முறை இல்லையா...? இதற்குச் சட்டமும் கோர்ட்டும் இல்லையா...?' என் மனக்கேள்வி அன்றைக்கு அடங்கவேயில்லை.

மறுநாள் முதல் எதிர்வீட்டுத் திண்ணையில் தாத்தா இல்லை. யாரும் அதற்காக வருத்தப்படவும் இல்லை.

**தஞ்சையின் காதலன்**



## திருத்த முடியாதப்பு!

'திருட்டுப் பயலே' ஜீவன் ஓர் அதிர்ஷ்டக் கட்டை. பிரமாதமா பண்ணியும் பல பேரோட படங்கள் பெட்டிக்குள் சுருண்டு கொள்ள, இவர் பண்ற படங்கள் எல்லமே நல்லாவே போகுது. லேட்டஸ்ட்டா ரிலீஸாகியிருக்கற 'நான் அவன் இல்லை' கூட ஏமாத்தலை. ஆனா, ஏன் தொடர்ந்து பெண்களை ஏமாத்துற கேரக்டராவே பண்ணணும்?

''எல்லாருக்கும் ஒரு ரூட் இருக்கும். என் ரூட் இது. இதைச் சொல்லிக்க நான் வெட்கப்படல. நிஜ வாழ்க்கைல எப்படியிருக்கேன்னுதான் பார்க்கணும். சினிமா வேற, யதார்த்தம் வேற. இதை மக்கள் நல்லாவே புரிஞ்சு வச்சிருக்காங்க. எனக்கு அது போதும்'' என்று ரெடிமேட் பதில் தரும் ஜீவன், அடுத்து பண்ணப் போகும் படம் 'மச்சக்காரன்'. ''அதுகூட அப்படிப் பட்ட கதைதான்'' என்கிறார் சிரித்துக் கொண்டே. ம்... உங்களைத் திருத்த முடியாதப்பு! •

- ப்ரியா

அன்று சனிக்கிழமையானதால் ஊர்க் கோயிலில் கூட்டம் பெருகியிருந்தது.

"ஒரே செட்டா எல்லா செருப்பையும் குடுங்க. டோக்கனைப் பத்திரமா வச்சுக்குங்க." எதிர்வீட்டுத் தாத்தாதான் இப்போது செருப்புக் கடை பாதுகாவலர்.

மனக்கேள்வி அடங்காத அன்று ராத்திரியே தாத்தாவை ஊர்க் கோயிலுக்குக் கூட்டி வந்துவிட்டேன்.

தாத்தா நிலைமை செருப்புக்கும் கேவலமாகிவிட்டது. செருப்புக்கும் செருப்புக்கும் முடிச்சுப் போட்டுப் பார்த்தேன்... வழி கிடைத்தது. தாத்தா இன்று மகிழ்ச்சியாய்...

"கோயில்லேர்ந்து சாப்பாடு குடுத்துடறோம். பெரியவரு இங்கயே இருக்கட்டும்' நிலைமையை அன்று நான் விளக்கிய உடனேயே தாத்தாவைப் பாதுகாக்க ஒப்புக் கொண்டார் கோயிலில் பணிபுரியும் எனக்குத் தெரிந்த கிருஷ்ணன் மாமா.

தாத்தாவை உற்றுப் பார்த்தேன். முகத்தில் சந்தோஷ ரேகை படர்ந்திருந்தது. அவரோட கூட இரண்டு சிறுமிகள். செம்பட்டை முடி, அழுக்கு மேல் சட்டை, மஞ்சள் பை, கீச்சுக் குரல்கள்.

''இன்னிக்கு அரப் பள்ளிக்கூடந்தானே'' மூங்கில் கட்டுக்குப் பின்னால் குனிந்து எதையோ எடுத்தார் தாத்தா. இரண்டு தாமரை இலைகளில் தயிர் சாதம், ஊறுகாய்.

"சாப்பிடுங்க."

நான் அவரை ஊடுருவுவதை உணர்ந்து, "என்னப்பா பாக்கற... கோயில்லேர்ந்து எனக்கு வந்த மத்தியானச் சோறு. இதுங்களோட தகப்பனார் உப்பளத்துல வேல பாத்தவரு. சுனாமி இழுத்துட்டுப் போயிடுச்சு. அம்மா இந்த ஊருக்கு இதுங்களைக் கூட்டிட்டு வந்திடுச்சு. இங்க பாரு.."

கோயில் வாசலில் பெரிய சிக்குக் கோலம். "அந்த அம்மாதான் தெனமும் கோயில் வாசலக் கூட்டிக் கோலம் போடுது. எனக்குத்தான் மத்தியானச் சாப்பாடுங்கறது வருஷக்கணக்கா மறந்து போன விஷயமாச்சே. வளர்ற புள்ளங்க. அதான் தெனமும் கோயில் சாப்பாட்ட இதுங்ககிட்ட குடுத்துடறது."

தாத்தா பேசிக்கொண்டே போக, ஏனோ என் கண்கள் பனித்தன. தாத்தா கவனித்துவிட்டார். இப்போது அவர் கண்களும்... •

வந்துவிட்டார்! திகம்பர சாமியார்

ஆங்கில நாவல்களுக்கு இணையாக

# THRILLERS IN தமிழ்

**1930-களில்**

**தமிழகத்தை கலக்கி**

தமிழ் வாசகர்களை அசர வைத்த

வடுவூர் **கே.துரைசாமி ஐயங்கார்**, பி.ஏ.,

எழுதிய நாவல்கள் – புதுப்பொலிவுடன்

**ஆங்கிலத்தில் ஷெர்லாக் ஹோம்ஸ்**

**நவீன காலத்தில் 007 ஜேம்ஸ்பாண்டு**

**தமிழகத்தில் அன்றும் இன்றும் என்றும்**

# திகம்பர சாமியார்

என்று போற்றப்படக் கூடிய, **தரமான, த்ரில்லர்கள்**

விறுவிறுப்பான **துப்பறியும்** கதைகள்

கையில் எடுத்தால் கீழே வைக்க முடியாத அளவிற்கு கட்டிப் போடும்.

உவகையூட்டும் நாவல்கள் வெளிவந்து விட்டன.

வரம்பு மீறல்கள், நயவஞ்சகம் சூழ்ச்சி ஆகியவற்றை பிரமிப்பூட்டும் வகையில்

முறியடிக்கும் திகம்பர சாமியார் மற்றும் பிற கதாபாத்திரங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பூர்ண சந்திரோதயம் | (5 பாகங்கள்) | ..... | ரூ. 650.00 |
| 2. | கும்பகோணம் வக்கீல் | (2 பாகங்கள்) | ..... | ரூ. 200.00 |
| 3. | மாயா விநோதப் பரதேசி | (3 பாகங்கள்) | ..... | ரூ. 385.00 |
| 4. | மேனகா | (2 பாகங்கள்) | ..... | ரூ. 250.00 |
| 5. | மதன கல்யாணி | (3 பாகங்கள்) | ..... | ரூ. 355.00 |
| 6. | சௌந்திர கோகிலம் | (4 பாகங்கள்) | ..... | ரூ. 460.00 |
| 7. | பாலாமணி (அ) பக்காத் திருடன் | (2 பாகங்கள்) | | ரூ. 170.00 |
| 8. | வசந்த மல்லிகா | | ..... | ரூ. 110.00 |
| 9. | வித்யாசாகரம் | | ..... | ரூ. 100.00 |
| 10. | பன்னியூர் படாடோப சர்மா | | ..... | ரூ. 150.00 |
| 11. | திவான் லொடபடசிங் பகதூர் | | ..... | ரூ. 40.00 |
| 12. | திரிபுரசுந்தரி (அ) திகம்பரசாமியார் திடும்பிரவேசம் | | | ரூ. 130.00 |
| 13. | வஸந்த கோகிலம் | | ..... | ரூ. 90.00 |
| 14. | தங்கம்மாள் (அ) தீர புருஷனின் தியாக கம்பீரம் | | | ரூ. 75.00 |







அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,

தபால்பெட்டி எண் 617, மயிலாப்பூர்,

சென்னை - 600 004. தொலைபேசி : 24641314

e-mail : www.alliancebook.com

visit us at : Srinivasan@alliancebook.com

**தர்மம் தலை காக்குமா?**

**- கஷ்மிதா, அண்ணாநகர்**

ஓஸில யாராவது தர்மமா கொடுத்தாலும் சரி, இல்லை நாமே காசு கொடுத்து வாங்கினாலும் சரி... ஓரளவு 'ஹெல்மெட்' நம்ம தலையைக் காக்கும்.

**அது என்ன மச்சி கணக்கு 36-26-36?**

**- சதீஷ், சேலம்**

'36-26-36' ஒருநாள் delete ஆகப்போற 'ஜியாமெட்ரிகா' லட்சணம்... அகத்தின் அழகுதான் அழியாமல் save ஆகும் 'சாமுத்ரிகா' லட்சணம்!

**டி.வி.யில் விரும்பிப் பார்க்கும் நிகழ்ச்சி?**

**- எஸ்.நடராஜமூர்த்தி, கோயம்புத்தூர்**

காலையில் எழுந்தவுடன் 'பொதிகை'யில் வேளுக்குடி.... அப்பாலதான் காஃபி குடி.. ஒருவேளை மகாபாரதத்தில் கண்ணனுக்குப் பதிலாக வேளுக்குடி கிருஷ்ணன் அர்ச்சுனனுக்குக் கீதையைக் கூறியிருந்தால், அதை ஒட்டுக் கேட்டு துரியோதனனே மனம் திருந்தி பாண்டவர்களைக் கட்டித் தழுவி 'நிங்களோடு நூற்றி ஐவரானோம்' என்று கூறியிருப்பான்...

# ஐஸ்வர்யாராய் திருமணத்துக்குப் போனீங்களா?



**ஐஸ்வர்யாராய் - அபிஷேக் பச்சன் கல்யாணத்துக்குப் போயிருந்தீர்களா?**

**- வரதராஜன், மேற்கு மாம்பலம்**

'வரது' இந்த நக்கல்தானே வேணாங்கறது... கல்யாணத்துக்குச் சேர்ந்து போகலாம்னு சொல்லிட்டு இப்படி கடைசி நிமிஷத்துல டபாய்ச்சுட்டீங்களே... ''பழய விரோதத்தை மனசுல வச்சுண்டு இப்படிப் பழிவாங்கிட்டானே படவா வரது''ன்னு அமிதாப் ஹிந்தில கேட்டுத் தமிழ்ல அவன் உசரத்துக்கு விட்ட கண்ணீர், மழை மாதிரி பெஞ்சு என் தலையை நனைச்சுது தெரியுமா...? பத்தாதகுறைக்கு ஜெயா பச்சன் ''சின்ன வயசுல அபிஷேக்குக்கு உசரம்னா பயம்... அமிதாப்ஜிக்கு பதிலா சின்ன ஸ்டூல் மாதிரி இருக்கற 'வரதுஜி'தான் தோள்ள தூக்கி வளர்த்தார்''ன்னு கட்டுச் சாத கூடையின்போது எங்கிட்ட மாஞ்சு மாஞ்சு புலம்பிட்டா... என்னைச் சுத்தி அமீர்கான், சல்மான்கான், ஷாருக்கான்னு கும்பல் வேற... வரது உன்னால எனக்கு ரொம்ப அவமானமா போயிடுத்துத் தெரியுமா...!



**சமஸ்க்ருதம், தமிழ், ஆங்கிலம், ஹிந்தி... இதில் எது சிறந்த பாஷை?**

**- பூஜா, அடையார்**

இன்றைய தேதிக்கு எல்லோராலும் பாராட்டிப் பேசப்படும் பாஷை 'மொழி'...

**கவிஞர் வாலி பற்றி...?**

**- மணிவண்ணன், ஸ்ரீவில்லிபுத்தூர்**

எதுகை இவருக்கு



# கிரேஸியைக் கேளுங்கள்

எழுதும் கை... மோனை இவரது பேனா முனை... சந்தம் இவர்கூடப் பிறந்த சொந்தம்... வாலி தமிழைத் தாலாட்டும் தூளி... கம்பன் வீட்டுக் கட்டுத்தறி கவி பாடுமென்றால், வாலியின் வெற்றிலைப் பெட்டி வெண்பா, விருத்தம் கூறும்... கதர் ஜிப்பா அணிந்த கலைவாணி... உங்களைக் கவர்ந்த இளைஞர் யாரென்று கேட்டிருந்தால் 'வாலி(பன்)' என்று வாய் நிறையச் சொல்லியிருப்பேன்.

**எது இலக்கியம்?**

**- என்.ஜெயக்குமார், ஈக்காடுதாங்கல்**

ஒரு இலக்கை 'AIM'மாகக் கொண்டு எழுதப்படுவது 'இலக்கியெய்ம்'... மற்றதெல்லாம் பொழுது போக்கு கலக்கியம்...

**அதிகாலையில் கண்ட கனவு உங்களுக்குப் பலித்திருக்கிறதா?**

**- கா.சுகுமார், திருநெல்வேலி**

சாமி, எனது நீண்ட நாள் கனவே ஒரு நாளாவது அனைவரும் போற்றும் அந்த அதிகாலையைக் காண வேண்டும் என்பதுதான்... உங்க வாய் முகூர்த்தம், கூடிய சீக்கிரம் நான் அதிகாலையில் எழுந்திருப்பது போல கனவும் வந்து, அது பலிக்கவும் செய்தால், டிக்கெட் வாங்கி உங்களை 'சிவாஜி' அதிகாலை ஷோவுக்கு அழைத்துப் போகிறேன்...

**தூக்கத்தில் நான் குறட்டை விடுவேன்... மனைவி அலுத்துக்கொள்கிறாள்... என்ன செய்ய?**

**- சின்ன கேசவன், திருப்பதி**

காசிக்குப் போனால் எதையாவது விட வேண்டும் என்பார்கள்... நீங்கள் உங்கள் குறட்டையை காசிக்குப் போய் விடுங்கள்... சென்னையில் இருக்கும் மனைவி காதில் விழாது... இதையும் மீறி உங்கள் குறட்டை DTS ரேஞ்ச் என்றால், இதற்கான விஞ்ஞானத் தீர்வை அண்ணன் சுஜாதாவிடம் கேளுங்கள்...

**ஹாலிவுட் படத்தில் நடிக்கக் கூப்பிட்டா போவீங்களா?**

**- எஸ்.முத்துக்குமார், திருச்சி**

ஸாரி மன்சுக்கப்பா... ஆஸ்கார் விருதை வச்சுக்க எங்க வூட்டு அலமாரில இடம் இல்லை கண்ணு... ஹவுஸ்ஃபுல்...

**எல்லோரையும் சிரிக்க வைக்கும் தங்களைச் சிரிக்க வைத்தது யார்?**

**- சிவசுப்ரமணியம், சாஸ்திரி நகர்**

அப்புசாமி தாத்தாவைப் பெத்து, அவரை சீதா பாட்டிகிட்ட மாட்ட வச்ச, நகைச்சுவையில் பாக்கி வக்காத கொன்னுத் தாத்தா பாக்கியம் ராமசாமி...



# “...ம்... ம்... அக்காவுக்குப் பரிசு கிடைக்கலே...”

**வி**ஜய் டி.வி.யின் சூப்பர் ஹிட் நிகழ்ச்சியான ‘ஏர்டெல் சூப்பர் சிங்கர்’ பெரியவர்களுக்கான குரல் தேடும் போட்டியைப் போலவே, ‘சூப்பர் சிங்கர் ஜூனியர்’ போட்டிக்கும் சின்னத்திரை ரசிகர்களிடம் ஏக வரவேற்பு. சென்னை, திருச்சி, கோவை நகரங்களில் நடந்த தகுதிச் சுற்றில் தலா பதினைந்து பேர் வீதம் தேர்வான ஜூனியர்களிலிருந்து, இருபத்தைந்து பேர் இறுதிச் சுற்றுக்குத் தேர்வு செய்யப்பட்டனர். அவர்களிலிருந்து தமிழ்நாட்டின் செல்லக் குரலாக ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் நடுவர்களாக பாடகிகள் உஷா உதூப், சித்ரா.

‘எப்படி இருக்கிறது நடுவர் நாற்காலி அனுபவம்?’ என்று கேட்டால், உற்சாகமாகப் பேசுகிறார் உஷா.

“நான் இன்று புகழ்பெற்ற மேடைப் பாடகியாக இருந்தாலும், முறைப்படி நான் எந்த இசையும் கற்றுக்கொண்டதில்லை. எனவே, என்னை எந்தப் பாட்டுப் போட்டிக்காவது நடுவராகக் கூப்பிட்டால் தர்மசங்கடமாக இருக்கும். யார் மனமும் புண்படுவது எனக்குப் பிடிக்காது; எனவே, ஓரிருவருக்கு மட்டும் பரிசு கொடுத்துவிட்டு, மற்றவர்கள் ஏமாற்ற மடைவதை என்னால் சகித்துக்கொள்ள முடியாது. இங்கே அத்தனையும் சிறுவர், சிறுமிகள். அவர்களை ‘நீ தேர்வாகவில்லை’ என்று சொல்லி ஏமாற்ற மடையச் செய்வது எனக்கு மிகவும் கஷ்டமாக உள்ளது.

இந்தக் குழந்தைகளுக்குள் இவ்வளவு திறமை ஒளிந்து கொண்டிருக்கிறதா என்று ஆச்சரியப்பட்டுப் போகிறேன். அதே சமயம், தேர்வு செய்யப்படவில்லை என்றால், குழந்தைகள் அதை ஸ்போர்டிவாக எடுத்துக் கொள்வதில்லை என்னும்போது மிகவும் வருத்தப்படுகிறேன். இந்தப் போட்டியில் ஜெயிப்பது பெருமைதான். அதே சமயம் போட்டியில் கலந்துகொள்ளும் எல்லோரும் ஜெயிக்க முடியாதல்லவா? தோற்றுப்போனால் அத்துடன் எல்லாம் முடிந்துவிட்டதுபோல நினைத்துக்



• நடுவர்கள் உஷா உதுப், சித்ராவுடன் நிகழ்ச்சித் தொகுப்பாளினி சின்மயி.

கொண்டு அழ ஆரம்பிக்கிறார்கள். அவர்களுக்கு ஆறுதல் சொல்லி தேற்ற வேண்டிய அம்மாக்களும் அப்செட்டாகி அழுதுவிடுகிறார்கள். இதைத்தான் என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. இந்த வயதில் படிப்புதான் முக்கியம். பாட்டு, டான்ஸ் போன்றவற்றை எல்லாம் கற்றுக்கொள்ளட்டும். ஆனால், அவை எல்லாம் இரண்டாம் பட்சம்தான் என்பதை முதலில் பெற்றோர்கள் புரிந்துகொள்ள வேண்டும்" என்கிறார் உஷா உதூப்.

சரி, இன்னொரு நடுவரான சித்ராவின் அனுபவம் எப்படி?

"குழந்தைகளின் திறமை என்னையும்கூட ஆச்சரியப்பட வைக்கிறது. நான்கூட ஸ்கூலில் படிக்கிறபோது, பாட்டுப் போட்டிகளில் கலந்துகொண்டது உண்டு. ஆனால், அப்போது எனக்கு இருந்த மேடை பயம், இந்தக் குழந்தைகளிடம் துளியுமில்லை. எல்லோரும் மிகுந்த தன்னம்பிக்கையுடன் பாடுவதைப் பார்க்கிறபோது சந்தோஷமாக உள்ளது. குழந்தைகளைவிட, பெற்றோர்கள் ரொம்பவே டென்ஷனாகி விடுகிறார்கள். முதல் நாள், தன் அக்காவுக்குப் பரிசு கிடைக்கவில்லை என்றதும், ஒரு சின்னப் பையன் அழுதது என்னை மிகவும் வருத்தமடைய வைத்துவிட்டது. தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள இளம் திறமைசாலிகளைக் கண்டறியும் விஜய் டி.வி.யின் இந்த முயற்சிக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள்."

– **மானஸா**

# முதலை வேட்டை!

## ஜனங்களின் சாமி - 17

"குயவர் குலப்பட்டணம்னு ஓர் ஊரு. இங்க இருந்த மாடப்பரும் மாடத்தியம்மாளும் தங்களுக்கு ஒரு வாரிசு இல்லையேன்னு ரொம்பக் கவலைப்பட்டு, சங்கரன் கோயில் கோமதியம்மாள் சன்னதிக்குப் போயி ஒரு மண்டலம் வெளக்கு ஏத்துனாங்க.

பத்தாவது மாசம் முத்துப்போல ஒரு ஆம்பளப் பிள்ளை பொறந்தான். அந்தப் பிள்ளைக்கு சேர்வைக்காரன்னு பேரு வச்சி, வளர்த்தாங்க. மீன், பாம்பு, ஆமைன்னு அத்தனை ஜீவ ராசிகளையும் தூண்டில் போட்டுப் பிடிக்கறதுல மகா நிபுணனா இருந்தான் சேர்வை. அவன் பேரும் புகழும் சுத்து வட்டாரமெல்லாம் பரவிட்டு. கேள்விப்பட்ட அந்நாட்டு ராசா, அவனைத் தன்னோட அரண்மனைக்கு, சேவை செய்ய வரும்படிக் கூப்பிட்டு ஆள் அனுப்பினார்.

ஆரம்பத்துல காவல் படைத் தலைவனாகத்தான் சேர்வைக்காரனை ராசா நியமிச்சார். அவனோட காவலில் ஒரு ஈ, எறும்புகூட நுழைய முடியலை. அதனால அரண்மனையிலும் அவன் புகழ் பெற்றான்.

அந்த ராசா ஒரு மீன் பிரியர்.

ராசாவின் மீன் ருசியைத் தெரிஞ்சிக்கிட்ட சேர்வைக்காரன், தினமும் நேரம் கிடைக்கும்போதெல்லாம் விதவிதமான தூண்டில் போட்டு, விதவிதமான மீன்களைப் பிடிச்சிக்கிட்டுப் போய் அரண்மனையில் கொடுத்தான். ராசாவும் ஆசைதீர சேர்வைக்காரன் புண்ணியத்தில் வாய்க்கு ருசியா மீன் குழம்புச் சாப்பிட்டார்.

சேர்வைக்காரன் பிடிச்ச மீன்களை ராசா வீட்டுக்குக் கொடுக்கவும், காலியான மீன் தெல்லியை வாங்கவுமாக அடிக்கடி அரண்மனைக்குப் போக வர இருந்தான்.

இப்படியாக இருக்கும்போது, ராசா மகள் சுந்தரேஸ்வரி, ஒரு நாள் 'எனக்குத் தொட்டியில் போட்டு வளர்க்க செம்மீன்கள் உயிரோட வேணும்'னு கேட்டாள்.

உடனே அத்தாளநல்லூர் குளத்துக்குப் போய், செம்மீன்களைத் தூண்டில் போட்டுப் பிடிச்சு, குடுவைக்குள்ள போட்டு வச்சு, அதை ராசா மகளிடம் கொண்டு போய்க் கொடுத்தான்.

பிறகென்ன... ரெண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் காதலிக்க ஆரம்பிச்சாங்க. இந்தச் சேதி ராணி காதுல விழுந்திச்சு. ராணி தன் மகளைத் தன் அண்ணன் மகனுக்குத்தான் கட்டிக் கொடுக்கணும்னு நினைச்சாள். அதனால, சேர்வைக்காரனைத் தந்திரமாகக் கொல்லணும்னு திட்டம் போட்டாள்.

அத்தாளநல்லூர்ல ஆதிமூலப் பெருமாள் கோயில் ஒண்ணு இருக்கு. அந்தக் கோயில் யானை, பக்கத்துல உள்ள குளத்துல இருந்து தன் தும்பிக்கையில் நீர் உறிஞ்சிக்கிட்டுப் போயித்தான் தினமும் பெருமானை அபிஷேகம் செய்யும்.

அப்படி ஒரு நாள் யானை குளத்துக்குள்ள இறங்கித் தண்ணீரை தன் தும்பிக்கையால் உறிஞ்சும் போது, ஒரு முதலை யானையோட காலைக் கவ்வ வந்தது. யானைப் பாகன் சுதாரிச்சி, யானையைப் பின்னுக்கு இழுத்துட்டான். அன்னிக்கி யானை பிழைத்தது மறுபிழைப்பு.

யானைப் பாகன் நடந்த நடப்பை கோயில் குருக்களிடம் சொல்ல, கோயில் குருக்களும் ராசாவிடம் போய்ச் சொன்னார். ராசா சேர்வைக்காரனைக் கூட்டிக்கிட்டு வரச் சொன்னார். அரண்மனைச் சேவகர்களும் சேர்வைக்காரனைக் கூட்டிக்கிட்டு வந்தாங்க.

ராசா, "அத்தாளநல்லூர் குளத்துல கிடக்கிற முதலைகளை நீதான் பிடிச்சிக் கொல்லணும்"னு சேர்வைக்காரனிடம் சொன்னார்.

ராணி, 'இந்தச் சமயத்துல சேவைக்காரனை ராசாவுக்குத் தெரியாம கொன்னுரணும்; பழியும் நம்மேல வரக்கூடாது. அப்பதான் நம் மகள் அவனை மறப்பாள்'னு நினைச்சா.

மறுநாள் சேர்வைக்காரனை அரண்மனைக்கு வரவழச்சா ராணி. தன் மகளையே அவனுக்கு விருந்து பரிமாறச் சொன்னா. சேர்வைக்காரனுக்குத் தரிக்கத் தாம்பூலமும் தட்டுல வச்சிக் கொடுத்தாள் ராசா மகள்.

அப்ப அவங்க நோக்கத்த ராணி கண்ணால கண்டுக்கிட்டா. ராணி, ஒரு நகைப்பெட்டி நிறைய நகைகளைக் கொடுத்து, "அத்தாளநல்லூர் குளத்துல உள்ள முதலைகளை நீ எப்படியும் பிடிச்சிருவேன்னு எனக்குத் தெரியும். அதனாலதான் உனக்கு

கழனியூரன்

முன்கூட்டியே இந்த நகைகளைப் பரிசாத் தந்திருக்கேன். இந்த விஷயம் ராசாவுக்குத் தெரிய வேண்டாம். நீ குளத்துக் கரையில உக்கார்ந்து முதலைகளைப் பிடிக்கும்போது நான் கொடுத்த இந்தச் சங்கிலி, சரப்புளிகளை எல்லாம் போட்டுக்கிட்டு, வர்ற பௌர்ணமி ராத்திரியில் முதலைகளைப் பிடிக்கணும். இது என் உத்தரவு''ன்னு சொன்னாள்.

சேர்வைக்காரன் ராணியோட சூழ்ச்சி தெரியாம 'சரி'ன்னு தலையை ஆட்டினான்.

சேர்வைக்காரனைக் கொலை செய்து நகைகளைக் கொள்ளையடிக்கணும்னு ராணி, தன் அண்ணங்காரனுக்கு ஓர் ஓலை எழுதி, ரகசியமா ஆள்கிட்ட அதைக் கொடுத்து விட்டாள்.

ராணியோட அண்ணன் சேர்வைக்காரனைக் கொல்ல பத்து ஏவல் ஆட்களை அத்தாளநல்லூர்க்கு அனுப்பினார்.

அத்தாளநல்லூர் குளத்தில் 'கருமூக்கு முதலை,' 'செம்மூக்கு முதலை' என்று ரெண்டு முதலைகள் கிடந்தன.

நிறைந்த பௌர்ணமி அன்னைக்கு நடுச்சாம வேளையில் அத்தாளநல்லூர் குளத்துக் கரையில கழுத்து நிறைய நகைகளைப் போட்டுக்கிட்டு உக்கார்ந்து, செம்மூக்கு நாய்க் குட்டியைத் தூண்டில் முள்ளில் கோத்து, தூண்டில் கயித்தைக் குளத்துக்குள் போட்டான் சேர்வை.

செம்மூக்கு முதலைத் தூண்டிலில் கிடந்த செம்மூக்கு நாய்க்குட்டியை கவ்வியது. உடனே செம்மூக்கு முதலையைப் பிடித்துக் கரையில் போட்டுக் கொன்றான்.

தக்க சமயத்தைப் பார்த்துக் காத்துக்கிட்டிருந்த எதிரிங்க, சேர்வைக்காரனைப் பின்னால் இருந்து முதுகிலும், பக்கவாட்டில் இருந்து விலாவிலும் ஈட்டியால் குத்திச் சாய்ச்சாங்க. ரெத்த வெள்ளத்தில் மிதந்த சேர்வைக்காரன் மார்பில் போட்டிருந்த நகை, நட்டுகள், சங்கிலி, சரப்புகள் எல்லாத்தையும் களவாடிட்டு, குத்துயிரும் குலையுயிருமாக் கிடந்தவனைக் குளத்துல தூக்கிப் போட்டுட்டுப் போயிட்டாங்க.

விடிஞ்ச பிறகுதான் ஊர் மக்களுக்கு சேர்வைக்காரன் செத்துட்டாங்கிற விவரம் தெரிஞ்சிச்சு. ராசா மகள் மட்டும் தன் தாயின் சூழ்ச்சியைப் புரிஞ்சிக்கிட்டா. 'இனியும், நாம உயிரோட இருக்கக் கூடாது'ன்னு நினைச்சி அதே குளத்துக்குப் போயி, தன் கால்களில் பெரிய கல்லைக் கட்டிக்கிட்டு குதிச்சித் தன் உயிரை மாச்சிக்கிட்டா.

குளத்துல கிடந்த முதலைகளைப் பிடிக்கறதுக்காகத் தன் உயிரையே விட்டதால, அன்னையில இருந்து சேர்வைக்காரனை மக்கள் 'சுசமாடன்'ங்கற பேர்ல சாமியாக் கும்பிடுறாங்க''ன்னு கதையைச் சொல்லி முடித்தார் மேலகரத்தைச் சேர்ந்த ஐயாத்துரை.

(முடிந்தது)

# '377' குறும்பட விமர்சனம்!

எஸ்.ஆர்.எம். கல்லூரியின் விஷுவல் கம்யூனிகேஷன் ஸ்டூடண்ட்டோட படைப்பு இது. ஓபனிங் ஷாட்லேயே ஒரு மர்மக் கொலை. அடுத்து என்னங்கற எதிர்பார்ப்பு எகிறும்போதே... அடுத்தடுத்து மர்மக் கொலைகள் தொடருது- அதுவும் இளம் வயது இளைஞர்களை மட்டும் குறிவைத்துக் கொல்றாங்க. யாராக இருக்கும்ங்கிற எதிர்பார்ப்பு குறைஞ்சு 'ஏன்'ங்கற கேள்வி மூளையைத் துளைக்குது. இந்தக் கொலைகளைப் பற்றித் துப்பறிய அமிர்தராஜ் (இவர்தான் இந்தக் குறும்பட டைரக்டர்) தலைமையில் ஒரு துப்பறியும் டீம் களமிறங்குது. க்ளைமாக்ஸ் ரொம்ப அதிர்ச்சி நிறைஞ்சது.

படுவேகமான காட்சிகள். பாடல், ஹீரோயிசம்னு எதுவும் இல்லாம செம த்ரில்லரான படம் தந்ததுக்குப் பாராட்டியே ஆகணும். திரைக்கதையை நேர்த்தியாச் செதுக்கியிருக்கும் டைரக்டர் அமிர்தராஜ் ஞானத்துக்குப் பிரகாசமான எதிர்காலம் காத்திருக்கு. முக்கிய கதாபாத்திரத்துல நடிச்சு அற்புதமா ஸ்கோர் பண்ணியிருக்கற பாலாஜி (சிவநாராயணன்)க்கு ஸ்பெஷல் கைகுலுக்கல். அரவிந்தோட ஒளிப்பதிவு படத்தோட நம்மை ஒன்ற வச்சிடுது.

- லஜ்ஜாவதி



* குறும்படக் காட்சி...



"ஒரே கல்லுல ரெண்டு மாங்காய் அடிச்சீங்களாமே...?"

"ஆமா! அந்த மாங்கா வேணுமா?"

"ம்ஹூம்...அந்தக் கல்லு வேணும்!"

- அம்பை தேவா

# காது குடையுது டாக்டர்!



"என் காதுக்குள்ளே குடையுதுன்னு டாக்டர்கிட்டே போனேன்."

"என்ன செஞ்சாரு?"

"அவரும் சேர்ந்து குடைய ஆரம்பிச்சுட்டாரு."

- எல்.மூர்த்தி



"உன் மாமியாரைப் பேய் பிடிச்சிருக்குன்னு கேள்விப் பட்டேன். உண்மையா?"

"சான்ஸே இல்ல. அவங்களைத்தான் யாருக்குமே பிடிக்காதே...!"

- வெ.சீதாராமன்

"தேருக்கும் உங்க காருக்கும் ஒரே வித்தியாசம்தான் சார்"

"என்ன அது?"

"தேரை எல்லோரும் முன்னால் இருந்து இழுப்பாங்க. உங்க காரை எல்லோரும் பின்னால் இருந்து தள்ளுறாங்க!"

- எம்.அசோக்ராஜா



## நோயற்று வாழட்டும் உலகு

ஓம் நமோ பகவதே வாஸுதேவாய தந்வந்த்ரயே அம்ருத கலச ஹஸ்தாய,
ஸர்வ ஆமய விநாசநாய, த்ரைலோக்ய நாதாய, ஸ்ரீ மஹாவிஷ்ணவே நம:



வேலூர் வாலாஜாபேட்டை தன்வந்த்ரி ஆரோக்ய பீட வளாகத்தில்

**ஸ்ரீ முரளிதர ஸ்வாமிகள்** நடத்தும்

**மருத்துவ உலகின் நலன் வேண்டி,**

**உலகில் முதன்முறையாக**

# மெகா மெடிக்கல் மேளா

**வாருங்கள், வளமாக வாழுங்கள்!**

**இதுவரை எங்கும் கண்டும் கேட்டுமிராத புதுமையான முயற்சி**

# MEGA MEDICAL MELA

மக்கள் நோயற்ற நல்வாழ்வு வாழவும், நோய் கண்ட போது உரிய மருத்துவ சிகிச்சையளித்து குணப்படுத்தவும் மருத்துவர்கள் இருக்கிறார்கள். இத்தகைய மருத்துவர்களுக்கே ஒரு குறை ஏற்பட்டால் அதைச் சரிப்படுத்த வேண்டிய நிலையில் அவர்கள் நலன் கருதியும், அவர்களின் குடும்ப நலன் கருதியும் தன்வந்த்ரி ஆரோக்கிய பீட வளாகத்தில் மக்களும் மருத்துவர்களும் பயன்பெறும் வகையில் மருத்துவத்தின் அனைத்துப் பிரிவுகளிலும் கை தேர்ந்த நிபுணர்களைக் கொண்டு, ஒவ்வொரு நாளும் ஒருபிரிவு என்ற வகையில் மருத்துவ முகாம் மிகச் சிறப்பாக நடைபெற உள்ளது.

**உலகில் முதன்முறையாக நடைபெறும் மெடிக்கல் மேளாவில்**
**7.5.2007 திங்கள் அன்று காலை 10 மணி முதல் 2 மணி வரை நடைபெறும் அலோபதி மருத்துவத்திலும், தன்வந்த்ரி ஹோமத்திலும் புதுச்சேரி மாநில முதலமைச்சர் மாண்புமிகு ந. ரங்கசாமி அவர்கள் கலந்து கொண்டு சிறப்பிக்க உள்ளார்கள்.**

| | | |
|---|---|---|
| 3.5.2007 | வியாழன் | சித்த மருத்துவம் |
| 4.5.2007 | வெள்ளி | ஆயுர்வேத மருத்துவம் |
| 5.5.2007 | சனி | ஹோமியோபதி மருத்துவம் |
| 6.5.2007 | ஞாயிறு | யுனானி மருத்துவம் |
| 7.5.2007 | திங்கள் | அலோபதி மருத்துவம் |
| 8.5.2007 | செவ்வாய் | கால்நடை மருத்துவம் |
| 9.5.2007 | புதன் | நவீன மருத்துவம் |

இந்தப் புதுமையான, விசேஷமான மருத்துவ மேளாவில் மருத்துவத்தில் பல துறைகளிலும் உள்ள மருத்துவர்கள், மருந்து தயாரிப்பாளர்கள், விற்பனையாளர்கள் மற்றும் இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த பலரும் கலந்து கொள்கிறார்கள். மக்களும் மருத்துவர்களும் பயன்பெறும் வகையில் நடைபெற உள்ள இந்த மகத்தான மகா மருத்துவ மேளாவிலும் தன்வந்த்ரி யாகத்திலும் பங்கு கொண்டு அனைவரும் பலன் பெறுங்கள் என அன்புடன் அழைக்கிறோம்.

**உலக நலன் கருதி நடைபெறும் ஹோமங்களுக்கும் நன்கொடை விவரங்களுக்கும்**

**ஸ்ரீ முரளிதர ஸ்வாமிகள்**
C/o. ஸ்ரீ தன்வந்த்ரி ஆரோக்ய பீடம், கீழ்புதுப்பேட்டை, வாலாஜாபேட்டை,
வேலூர் மாவட்டம் - 632 513
போன் : 04172-230274, 230033 செல் : 9443330203

ஆரோக்ய பீடத்தில் அமாவாசை, பௌர்ணமி, திருவோணம், ஹஸ்தம், சுவாதி நட்சத்திரங்களில் இலவச ஔஷதம் வழங்கப்படும்.

சிறப்புச் சிறுகதை

# மேலாண்மை பொன்னுச்சாமி

**சா**மிநாதன் திண்ணையில் புத்தகங்களுடன் மல்லுக்கட்டிக் கொண்டிருக்கிறான். பைக்கட்டு கிடந்தது. அறிவியல், வரலாறு புத்தகங்கள் விரிந்த நிலையில். தமிழ் நோட்டும் இருந்தது. அதற்குள் பேனாவும் பென்சிலும் இருப்பது, அதன் புடைப்பில் தெரிகிறது.

ராசபாண்டி சின்ன சைக்கிளில் சர்ர்ர்ரென்று வந்து, இவன் வீட்டு முற்றத்தில் வட்டமடித்து, ஒற்றைக் காலை ஊன்றினான். கேரியரில் மட்டை சொருகப்பட்டிருக்கிறது.

"ஏலேய் சாமி, கௌம்பு... கௌம்பு... சீக்கிரம்."

"எங்க?"

"மறந்துட்டியா? இன்னிக்குத் தாண்டா, மேட்ச்? ஆவுடையாபுரம் பையங்க வர்றாங்க. நாமளும் போகணும். போன வாரமே நாம ஃபிக்ஸ் பண்ணினது தானே?"

சாமிநாதனுக்குள் 'குபுக்' கென்று உடைத்துக்கொண்டு பீறிடுகிற ஊற்றென விளையாட்டாசை. மனசின் இறக்கைகள் விரிகின்றன. உள்ளுக்குள் விசிலடிக்கிற மனசு. ஓடணும் என்று துறுதுறுக்கிற வயசு.

இந்த ஏரியாவிலேயே சாமிநாதனை மிஞ்சிய பந்து வீச்சுக்காரன் எவனுமில்லை. ஒரே சீராக ஓடிவந்து, 'சட்'டென்று வேகமெடுத்து ஒரு தாவு தாவி, கையைச் சுழற்றிப் பந்தை வீசினானென்றால்... மின்னல் வெட்டுதான். இடிமுழக்கம் தான். அப்படியொரு சூட்டிகை; சுறுசுறுப்பு; துள்ளல்.

ராசபாண்டி அவனைத் துரிதப்படுத்தினான்.

"பைக்கட்டை எடுத்து வைச்சுட்டு... பெறப்புடு.."

புத்தகங்களையும், பைக்கட்டையும் ஓரமாக ஒதுக்கி வைக்கப் பரபரத்த சாமிநாதன், பிரேக் போட்ட மாதிரி 'சட்'டென்று தேங்கித் திகைத்தான்.

"நா வரல்லேடா..." உயிரில்லாத குரலில் வந்த மறுப்பு. மனசின் வலி, முகத்தில் வாட்ட நிழலாகப் படர... மறுக்கிறான்.

"ஏண்டா?"

"எக்ஸாம் நெருங்குது... நா வரல்லே."

"எனக்கு எக்ஸாம் இல்லையா?"

"இல்லேடா ராசபாண்டி, நீங்க வசதியானவுக. என்ன மார்க் எடுத்தாலும்... லெவன்த் போயிருவீக. ஒங்கதையே வேற.."

சாமிநாதனின் கம்மிய குரலில் வெட்டுண்ட மனசின் வலி. அவனது ஏழ்மையையும், இயலாமையையும் அறிந்திருக்கிற ராசபாண்டியும் மௌனமானான்.

முதல்நிலை மாணவ - மாணவியர் பத்துப் பேரில் ஏழாவது ரேங்கில் இருப்பவன் சாமிநாதன். ரொம்ப ரொம்ப ஏழை. அன்றாடக் கூலிக்காரியின் மகன். மேல்நிலைக் கல்விக்குப் போக இயலாது என்பது சூரிய வெயிலைப்போல துல்லியமான நிச்சயம்.

உயர்நிலைப் பள்ளியின் தலைமையாசிரியராகப் பணியாற்றுகிற பாதிரியார், சாமிநாதனைத் தனியாக அழைத்துப் பரிவுடன் சொன்னார். "ஏழாவது ரேங்க்லே இருக்கே. முயற்சி பண்ணி கஷ்டப்பட்டு படி. ஃபர்ஸ்ட் ரேங்க் எடுத்துட்டா... உன்னை ப்ளஸ்டூ வரைக்கும் படிக்க வைக்க எங்க பங்குச்சபை ஏற்பாடு பண்ணும். அதுக்கு நான் கேரண்டி..."

அதுவரை ஏனோதானோவென்று பள்ளி வந்து போயிருந்தவன்... விளையாட்டில் அதிக அக்கறை காட்டியவன். கிரிக்கெட்டே கதியாய்க் கிடந்தவன்... 'பத்து வரைக்கும்தானே நம்ம எல்லை' என்று அசமந்தமாக இருந்தவன்... ரொம்பவே மாறிவிட்டான்.

புதிய குறிக்கோள். புதிய உற்சாகப் பெருக்கு. நிறைய்ய 'புதிய'கள்.

வலிமையிழந்த பலவீனக் குரலில் கேட்கிற ராசபாண்டி. "இன்னிக்கு ஒரு நாள் மட்டும் வாயேண்டா.."

"இல்லே... முடியாதுடா.."

கண்ணோரங்களில் விளையாட்டாசையைப் புதைத்த மனப்பிசைவின் ஈரக்கசிவு. தூக்குச்சட்டியும் கரண்டியுமாக வீட்டுக்குள்ளிலிருந்து வெளியே வருகிற தாயம்மா.

"பொழுது ஓடிருச்சு. சின்னையநாயக்



# அரிவாள் வெட்டு!

**சாமிநாதனின் கம்மிய குரலில் வெட்டுண்ட மனசின் வலி. அவனது ஏழ்மையையும், இயலாமையையும் அறிந்திருக்கிற ராசபாண்டியும் மௌனமானான்.**

கரு புஞ்சைக்குக் களை வெட்ட ஓடணும்... அம்மா போய்ட்டு வரட்டா?"

"ம்."

"தீப்பெட்டியாபீஸுக்கு குச்சியடுக்கப் போயிருக்குற அக்கா சாப்பிட வர்றப்ப நீயும் சாப்பிட்டுக்கோடா..."

"ஆவுட்டும்மா.."

வாய்ச் சொல் வாயிலிருக்க, வண்டிப் பாதைக்குப் போய்விட்ட அம்மாவின் பாதங்கள். பாசத்தில் குழைகிற மனசைக் கட்டியிழுத்துச் செல்கிற தாட்சண்யமற்ற லௌகீக வாழ்க்கை.

கொஸ்டின் பேப்பரில் கேள்வியை வாசித்துவிட்டு, அறிவியல் புத்தகத்துக்குள் பதிலைத் தேடி... குவிகிற மனக்கவனம்.

**க**ருமருந்து நாற்றமும், பசை வீச்சமும் கலந்த ஒரு நெடி, சாமிநாதனின் நாசியைத் தாக்கியது.

தீப்பெட்டியாபீஸுக்குப் போயிருந்த அக்கா வந்தாள்.

''ஒனக்கும் சோறு வைச்சிரவா?''

''ம்.''

வட்டில் முன் உட்கார்ந்து சோற்றைப் பிசைகிற சாமிநாதன், அக்காவைப் பார்க்கிறான். கனத்த பெருமூச்சு நெஞ்சை வகிர்ந்துகொண்டு வெளிவருகிறது.

கறுப்பாக இருந்தாலும் லட்சணமாக இருக்கிறாள். இவனைவிட பத்து வயதுக்கு மூத்தவள். இவன் ஒண்ணாப்பு படிக்கும்போது அவள் சடங்கானதாக மெல்லிய ஞாபகம்.

இவள் வயசுப் பெண்களெல்லாம் வாழ்க்கைப்பட்டுப் போய் ரெண்டு பிள்ளைக்குத் தாயாகிவிட்டனர். அக்காவைவிட இளைய பெண்கள்கூட.... காலத்தால் கைவிடப்பட்ட கல்லைப்போல நின்று நிலைத்துப்போனவள் அக்கா மட்டும்.

சாமிநாதன் மனம் கனக்கிறது.

குச்சியடுக்க ஓடணுமே என்று அவசரமாகச் சோற்றை யள்ளி வாயில் போடுகிற அக்காவைப் பார்க்க மனசு தாளாமல், முகம் தாழ்த்திக்கொள்கிற சாமிநாதன்.

மறுபடியும் திண்ணையில் வந்து உட்கார்ந்து புத்தகத்தை எடுத்தான்.

பரீட்சைக்குப் புறப்படுகிறபோது,

பாதிரியார் அழைத்து... ஆசீர்வதித்தார்.

உயிரையே திரட்டி சுட்டு விரலில் நிறுத்தி பரீட்சை எழுதினான். நன்றாகவே எழுதிவிட்டான்.

'நிச்சயமாக ஃபர்ஸ்ட் ரேங்க் வந்துரலாம்' அவனுள் வேர் பிடித்து விழுதுகளை இறக்குகிற நம்பிக்கைகள். சம்மர் லீவுக்கு சும்மா இருக்க விரும்பாமல் கட்டட வேலைக்குச் சித்தாளாகப் போனான். செங்கல் சுமக்க... மணல் சலிக்க.. சிமெண்டுச் சாந்துச்சட்டி சுமக்க... என்று வேலையில் மும்முரமான தருணத்தில் -



அன்றைக்கு ராத்திரி. உழைப்பின் வலியறிந்து பழகாத உடம்பு... உழைத்த களைப்பில் உண்டவுடன் படுத்துவிட்டான். உறங்கியும் உறங்காத திரிசங்கு நிலை.

அம்மாவின் கம்மலான குரல். கலக்கமும் சோகமுமாக கனக்கிற குரல்.

''ராசாத்தி... எனக்கென்னமோ.. இப்ப வந்துருக்குற எடத்தை வுட்ரக்கூடாதுன்னு தோணுது. நகை நட்டுன்னு பெருசா கேக்கலே..''

''அப்புறம்... கல்யாணச் செலவு, கம்மல், மூக்குத்தி, ஒரு தாலின்னு பாத்தாலும் முப்பதாயிரம் வேணுமே... நம்மகிட்டே ஏது? பேசாம... இதை வுட்டுட்டு வேற பேச்சு பேசும்மா...''

''இல்லேடி.. தீப்பெட்டி

யாபீஸ்லே கெஞ்சிக் கூத்தாடி, பத்தாயிரம் அட்வான்ஸா வாங்கிரலாம்."

"மிச்சத்துக்கு?"

"வீட்டைக் கட்டுன சாமி, வாசல் வைக்காமலா வுட்டுருவாரு? ஒனக்கொரு வழியைக் காட்ட மாட்டாரா?"

சாமிநாதனுக்கு நெஞ்சு கலங்கியது. மூடியிருந்த கண்ணோரங்களில் மனக் கசிவு. இன்னும் இருபதாயிரத்துக்கு எங்க போக?'

அந்திப்பொழுது. மஞ்சள் வெயிலும் மங்கி மறைய, இருளின் கரிய நிழல் பரவிக் கொண்டிருந்தது. சித்தாள் வேலை முடிந்து சாமிநாதன் வீடு திரும்புகிறான். கால் கையெல்லாம் சிமெண்டுச் சாந்து. ரத்தத்தை உறிஞ்சுகிற காந்தல். எவ்வளவு கழுவினாலும் போக மறுக்கிற சிமெண்டுக் கறை. வீட்டுக்குத் திரும்பினான் சாமிநாதன்.

"பதினையாயிர ரூவா முன் பணமா தர்றேன். கல்யாணத்தை ஜாம்ஜாம்னு நடத்துங்க."

மேலத்தெரு குருசாமிதான் வலிய வந்து சொல்கிறார். அம்மா முகம் அப்படியே பூவாக

**"புண்ணியத்தை வைச்சு என்ன செய்ய? மெட்ராஸ்ல எம்மகன் மூணு மளிகைக் கடை வெச்சிருக்கான். கடைக்கு ஆள் தேவைப்படுது."**

மலர்ந்து சிரிக்கிறது.

"அய்யா... உங்களுக்குக் கோடி புண்ணியம்."

"புண்ணியத்தை வைச்சு என்ன செய்ய? மெட்ராஸ்ல எம்மகன் மூணு மளிகைக் கடை வைச்சிருக்கான். கடைக்கு ஆள் தேவைப்படுது. ஓம் மகனை அனுப்பு. சாப்பாடு, தங்குற எடம் ஓசி. சம்பளமும் தருவான். என்ன சொல்லுதே?"

அரிவாள் வெட்டு விழுந்த மாதிரியிருந்தது அம்மாவுக்கு. மறுத்துவிட்டாள். ஆனால், என்ன நினைத்தானோ சாமிநாதன் குருசாமி வீட்டை நோக்கி நடந்தான்.

வைகாசியில் அக்கா கல்யாணம் முடிய... அடுத்த வாரமே பஸ் ஏறினான் சாமிநாதன், சென்னைக்குப் போக. பஸ், கிராமத்தைக் கடந்த போது

பள்ளி வளாகத்தில் கிரிக்கெட் நடந்து கொண்டிருக்க... பையன்கள் ஆட்டமும் கூச்சலுமாக இருந்தனர். பள்ளியும், கிரிக்கெட்டும் தூரம் தூரமாக போக... பஸ் விரைந்து கொண்டிருந்தது.

அந்த ஆண்டின் தேர்வு முடிவு வெளியாகிய போது, பள்ளியில் ஃபர்ஸ்ட் ரேங்கில் தேர்வாகியிருந்தான் சாமிநாதன். ●



# கவிதைத் திருவிழா!

பாடலாசிரியர் பா.விஜய்யின் பத்து நூல்கள் கலைஞரால் ஒரே நேரத்தில் வெளியிடப்படுகின்றன. சரித்திர நாவல்களும், கவிதை நூல்களும் இவற்றில் அடங்கும். இந்நிகழ்வை பெரும் கவிதைத் திருவிழாவாக நடத்தத் திட்டமிட்டிருக்கும் பா.விஜய், 'கலைஞர் என்னும் மூச்சுக்காற்று' என்கிற இசையும் ஓவியமும் பாடலும் கண்ணெதிரே சங்கமிக்கும் புதிய நிகழ்ச்சியொன்றை அரங்கேற்றவிருக்கிறார். வாலி, அப்துல் ரகுமான், மு.மேத்தா, பழநிபாரதி ஆகியோர் சேர்ந்து பாடலை இயற்ற, மாணிக்க விநாயகம், ஸ்ரீநிவாஸ், திப்பு, ஹரிணி, மாலதி ஆகியோர் இணைந்து பாட, ஓவியத்தைச் செதுக்குகிறார் செழியன். அப்போதே விஜய்யின் சொந்த ஊரான உட்கோட்டை கிராமத்தில் நூலகம் அமைக்க, ரூபாய் ஐந்து லட்சம் நிதியுதவியும் வழங்கப்படுகிறது. கலைஞரின் ஐம்பதாண்டு அரசியல் வாழ்வின் தொடக்கப் பணியாக, வசதியற்ற ஐம்பது மாணவர்களின் படிப்புச் செலவையும் ஏற்கிறார் பா.விஜய்.

– சுதா

போன வாரத்துல நம்ம இளைஞர்கள் சமுதாயத்தைக் கோபத்திலும் துக்கத்திலும் மூழ்கடிச்ச ரெண்டு சம்பவங்கள் நடந்திருக்கு. அது என்னங்கறதைப் பார்த்துட்டு, அப்புறமா காதல் நந்தவனத்துல நுழையலாம், சரியா?

**சம்பவம் ஒண்ணு : கோபம்**

ஏரியா விட்டு ஏரியா வந்து 'சைட்' அடிச்சாலே கொதிச்சுக் கிளம்பறவங்க நம்ம இளைஞர்கள். அப்படி இருக்கறப்ப ஒருத்தர் ஸ்டேட் விட்டு ஸ்டேட் வந்து லட்சக் கணக்கான இளைஞர்களின் கனவுக் கன்னி, காதல் இளவரசி ஷில்பா ஷெட்டிக்கு மேடையில வெச்சு 'இச்! இச்! இச்'ன்னு முத்தம் கொடுத்திருக்காரு. இன்னா தெகிரியம் பார்த்தீங்களா? இந்த மாதிரி இனியும் நடக்கக் கூடாது. இது சம்பந்தமா அடுத்த அமாவாசை நைட் பன்னிரண்டு மணிக்கு, நம்ம காதல் நந்தவனத்துல ஒரு கண்டனக் கூட்டம் நடத்தறதா இருக்கேன். வர்றவங்க எல்லாம் ஆளுக்கொரு உருவ பொம்மை, தீப்பெட்டி கொண்டு வாங்க.

**சம்பவம் இரண்டு : துக்கம்**

'எட்டாவது அதிசயம்' ஐஸ்வர்யாராய் கோடிக்கணக்கான பசங்களோட மனக் கூட்டுல இருந்து பிச்சுக்கிட்டுப் போய், 'பிரதீக்ஷா' பங்களாவுல அபிஷேக்பச்சன் கையில் அடைக்கலமாயிட்டாங்க. பாவம் நம்ம பசங்க, பொங்கிட்டு வர்ற துக்கத்தை மறைச்சுக்கிட்டு, 'எங்கிருந்தாலும் வாழ்க'ன்னு பாடிட்டு இருக்காங்க. எந்த எஃப்.எம்.மைத் திருப்பினாலும் நேயர் விருப்பமா இந்தப் பாட்டுதான் போகுது. சரி போகட்டும், ஐஸ்வர்யா போனா ஒரு 'ஜூஸ்'வர்யாவோ, 'சாக்கோபார்'வர்யாவோ பாலிவுட்டுக்கு வராமலா இருப்பாங்க?

இந்த வாரம் காதல் நந்தவனத்தை அலங்கரிக்கும் ஜோடி ராஜமுத்து-நிர்மலா. தமிழ்ப் புத்



தாண்டு இதழில்தான் காதல் நந்தவனம் ஆரம்பிச்சது. அதே போல இவங்களோட காதலும் ஆரம்பிச்சது ஒரு தமிழ்ப் புத்தாண்டில்தானாம்! இதைப் பற்றி ராஜமுத்து ரெண்டு பக்கங்களுக்குக் கடிதம் அனுப்பியிருந்தார். அதன் கருக்கம் :

தமிழ்ப் புத்தாண்டு தினத்தில் ரோஜாப் பூவுடன் சென்று நிர்மலாவிடம் காதலைச் சொன்னேன். விஷயம் பெற்றவர்களுக்குத் தெரிந்துவிட்டது. அப்புறம் என்ன? கிராமத்துத் தமிழ் சினிமா மாதிரி சண்டை, பஞ்சாயத்து, ஜாதியை விட்டு ஒதுக்குதல் என ஏக கலாட்டா. நான் வீட்டுக்கு ஒரே பிள்ளை. அம்மா செல்லம் வேறு. அதனால் காதல் வென்றது. பெற்றவர்களின் சம்மதத்துடன் ஜாம் ஜாமெனத் திருமணம் நடந்தது. இப்போது என் அம்மாவும் - நிர்மலாவும் பழகிக்கொள்ளும் விதத்தைப் பார்த்து 'அட! இப்படியும் ஒரு மாமியார் - மருமகளா' என ஊரே வியக்கிறது.

கடந்த 15.4.2007 இதழில் கேட்கப்பட்ட 'காத லின் முகவரி எது?' கேள்விக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட இரண்டு பதில்கள் இங்கே.

பாசம் காட்டும் இதயமும்<br>
ஆபாசம் விரும்பாத கண்களும்<br>
- ராம் ஆதிநாராயணன், தஞ்சாவூர்

கண்கள்,<br>
அழகு பெட்டி<br>
எண் : 143,<br>
அன்பு (வழி),<br>
இதயம் மாவட்டம்<br>
- தசத்திய நாராயணன்,<br>
அயன்புரம்



மதனராஜன்

ஓ.கே. இந்த வாரக் கேள்விக்குப் போவோம்...

**காதலை விட்டுக்<br>
கொடுக்கலாமா?**

- பதிலை உடனே போஸ்ட் பண்ணுங்க.

சரி, நம்ம வாசகர் ஈரோடு மு.ரா.சந்தோஷோட கவிதையை சந்தோஷமா படிச்சுட்டுப் பிரிவோம்...

ஒரு மாலைப் பொழுதில்<br>
என்னைக் கேட்டாய்...<br>
'உனக்கு எது முக்கியம்<br>
நானா உன் வாழ்க்கையா?'<br>
'என் வாழ்க்கை!'<br>
என்று நான் கூறியதைக் கேட்டு<br>
கோபமாய் நடந்தாய்...<br>
நீதான் என் வாழ்க்கை<br>
என்பதை உணராமல்!

# காதல் நந்தவனம்

• ராஜமுத்து - நிர்மலா தம்பதி...

அஜீத்தின் அடுத்த அவதாரம் 'கிரீடம்!' டைரக்ஷன் விஜய். 'அட... நடிகர் விஜய்யா?' என்று ஆச்சர்யப்பட வேண்டாம். இவர் அறிமுக இயக்குநர். சரி, யார் இந்த விஜய்?

"தயாரிப்பாளர் ஏ.எல்.அழகப்பனை உங்க எல்லாருக்கும் தெரியும். அவரோட ரெண்டாவது பையன்தான் நான். அண்ணன் உதயா நடிக்கப் போயிட்டாரு. ஆனா, எனக்கு டைரக்ஷன்லதான் ஆர்வம். பிரியதர்ஷன் சார்தான் என்னோட குரு. நிறைய விளம்பரப் படங்கள் பண்ணியிருக்கேன். சோனியா அகர்வால் பாடுற 'எடுத்துக்கோ... எடுத்துக்கோ...', 'சண்டேன்னா ரெண்டு'ன்னு மக்கள்கிட்ட எடுபட்ட விளம்பரங்கள் அதிகம். ஆனாலும் உள்ளுக்குள் ஏதோ ஓர் உறுத்தல்... 'விஜய், நீ நினைச்சது இது இல்ல'ன்னு. சடார்னு கிளம்பி சினிமாவுக்கு வந்துட்டேன். முதல் படமே அஜீத் சாரை வச்சு. யாருக்குக் கிடைக்கும் இப்படியொரு





# தாட்.'.பாதர்!

வாய்ப்பு!'' என்று சிலிர்க்கிறார்.

'அண்ணன் மாதிரி உங்களுக்கு நடிப்பாசை இல்லையா?' என்றால், பாய்ந்து வருகிறது விஜய்யிடமிருந்து பதில்.

''மாயக் கண்ணாடியில இயக்குநர் சேரன் சொன்ன மாதிரி நமக்கு எது நல்லா வரும்னு தெரியுதோ அதைத்தான் செய்யணும். டைரக்ஷன்தான் எனக்கு நல்லா வரும். செய்யறேன்'' என்கிறவர், அஜீத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் ரொம்பக் குஷியாகி விடுகிறார்.

''அஜீத் சார் கிடைச்சது எனக்கு மிகப்பெரிய கிஃப்ட். தான் ஒரு பெரிய ஹீரோங்கறதை மறந்துட்டு, அறிமுக நாயகன் மாதிரி



சொல்றதை எல்லாம் கேட்டுக்கிட்டு ரொம்ப அற்புதமா அட்டகாசம் பண்றாரு.''

'இந்தப் படம் சரியாப் போகலன்னா அடுத்த அஞ்சு வருஷத்துக்குப் புது இயக்குநர்களுடைய படத்துல நடிக்க மாட்டேன்னு அஜித் உங்ககிட்ட சொல்லியிருக்கிறாராமே?' என்றால்,

"ஆமாம். இப்படி அவர் தீர்மானிச்சதுல எனக்குப் பொறுப்புகள் அதிகமாயிடுச்சு. காரணம், அவர் புது இயக்குநர்களோட காட்ஃபாதர். அவருடைய படங்கள் பலருக்குக் கிடைக்கணும். அவர் இப்படிச் சொல்லிட்டதால் எங்க யூனிட் முழுக்கக் கஷ்டப்பட்டு மட்டுமில்ல, இஷ்டப்பட்டும் உழைக்கிறோம். ராஜ்கிரண் சார், த்ரிஷான்னு எல்லாரும் பிச்சு உதறியிருக்காங்க'' என்கிறார்.

'சரி, முதல் படத்தையே மலையாளத்திலிருந்து ரீமேக் செய்யணுமா?'

''இப்படித்தான் பலரும் தப்பா நினைச்சுக்கிட்டிருக்காங்க. மலையாள கிரீடத்தைச் சக்கையாப் பிழிஞ்சு 'தமிழ்'ல நெறைய படங்கள் வந்துடுச்சு. என்னோட குரு ப்ரியதர்ஷன் சார், 'கிரீடம்' படத்தை பேஸ் பண்ணி ஒரு படம் பண்ணுன்னு சொன்னாரு. அதனாலதான் அந்தப் படத்தோட மூலக் கதையை மட்டும் எடுத்துக்கிட்டு, கதை, திரைக்கதையை ரொம்ப வித்தியாசமா பண்ணியிருக்கேன். இன்னொரு விஷயம், ஒரு சீன்லகூட பஞ்ச் டயலாக்கைக் கேட்க முடியாது. 'ரசிகர்களுக்கு நல்ல கதைதான் டார்கெட். பஞ்ச் டயலாக் இல்ல. எனக்கே அதுல விருப்பம் இல்லை'ன்னு அஜித் சார் அழுத்தமா என்கிட்ட சொல்லிட்டாரு.''

-ம.மனோ விக்டர்


• விஜய்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/ வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

# நடக்குமென்பார்; நடக்கும்!

## 29.4.2007 முதல் 5.5.2007 வரை



**மேஷம்** : எண்ணங்கள் யாவும் ஈடேறும் வாரம். பணப் பற்றாக்குறை வராது. வீடு, மனை வாங்க ஏற்ற தருணம். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ஏற்றுமதி தொழில் செய்பவர்கள் நல்ல பலனை அடைய நேரிடும். வராத கடன்கள் வசூலாகும். சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயர் சுவாமிக்கு துளசி மாலை சாற்றி வழிபாடு செய்யவும். ராகு / கேது / குருவுக்கு விளக்கு ஏற்றி வரவும்.



**ரிஷபம்** : சுப காரிய நிகழ்ச்சிகள் கைகூடும். சிலருக்குப் பொன், பொருள், பூமி சேரும். குழந்தை பாக்கியம் கிட்டும். திருமணம் கைகூடும். வேலைப்பளு அதிகரிக்கும். சிலருக்கு அயல்நாடு சென்று வேலை செய்யும் வாய்ப்பு வந்து அளிக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல வளர்ச்சி ஏற்படும். ராகு / கேதுவுக்கு விளக்கு ஏற்றி வழிபாடு செய்து வரவும்.



**மிதுனம்** : தெய்வ அனுகூலம் ஏற்படும். புண்ணியஸ்தலம் செல்வீர்கள். கல்வி வளம் மேலோங்கும். பண வரவு ஏற்படும். குடும்ப வளம் நன்றாக இருக்கும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். வேலையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். நண்பர், உறவினர் ஆதாயம் கிட்டும். குருவுக்கு விளக்கு ஏற்றி வழிபாடு செய்துவர, நற்பலன் ஏற்படும்.



**கடகம்** : உடல் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்தவும். பணக் கஷ்டம் இருந்தாலும் குருபார்வையால் சமாளிக்கும் ஆற்றல் உண்டாகும். வேலைப் பளு அதிகரிக்கும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். வியாபாரத்தில் முன்னேற்றமான சூழ்நிலை உண்டாகும். ராகு / கேது / சனி கிரஹத்துக்கு அந்த அந்த நாளில் விளக்கு ஏற்றி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.



**சிம்மம்** : குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்து நடந்து கொள்ளவும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். திருமண காரியம் கைகூடும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். நீண்ட தூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் உண்டாகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு / கேது / சனி / குரு கிரஹத்தில் விளக்கி ஏற்றி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.



**கன்னி** : மேன்மையான வாரம். நல்ல காரியம் நடக்கும். மனச் சலனம் விலகும். புதிய முயற்சி கை கொடுக்கும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். குருவுக்கு விளக்கி ஏற்றி வழிபாடு செய்து வரவும்.

# பரத்வாஜ் பதில்கள்

என் மகனுக்கு நல்ல வரன் அமையுமா?

- எம்.சுப்ரமணியம், பெங்களூர்

உங்கள் மகனுக்கு 2007 கடைசியில் திருமணம் முடியும். நல்ல படித்த பண்புள்ள, வேலையில் உள்ள பெண் அமைவாள்.

இந்த வருடத்துக்குப் பெற்றோர் பார்த்த திருமணம் நடக்குமா?

- எம்.கே. கோபாலன், சென்னை

பெற்றோர் பார்த்துச் செய்யும் திருமணம்தான். நல்ல வேலை கிடைக்கும். இடமாற்றம் ஏற்படும்.



**துலாம் :** வியாபாரத்தில் நல்ல அபரிமிதமான லாபம் கிட்டும். கல்வி வளம் வளர்ச்சி அடையும். புதிய தொழில் முயற்சி நற்பலனை அளிக்கும். நீண்ட தூர அழைப்பு வந்து சேரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. எழுத்தாளருக்கு முன்னுரிமை கிட்டும். குழந்தைகள் வழியில் சுபச் செலவு ஏற்படும். ராகு / கேது / சனி கிரஹத்துக்கு விளக்கு ஏற்றி வழிபாடு செய்து நற்பலனை அளிக்கும்.



**மகரம் :** வீடு / மனை வாங்க நல்ல தருணம். வேலைப் பளு அதிகரிக்கும். திருமண காரியம் கைகூடும். நீண்ட கால கடன் தொல்லை விலகும். கல்வி வளம் மேலோங்கும். வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. கை பொருள் மீது கவனம் வைக்கவும். ராகு / கேது/ சனி கிரஹத்தில் தீபம் ஏற்றி வழிபாடு செய்துவரவும்.



**விருச்சிகம் :** திடீர் தன வரவு ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் விருத்தி ஏற்படும். புதிய வீடு / மனை வாங்க நல்ல தருணம். வேலைப் பளு அதிகரிக்கும். பொறுப்பான பதவி கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். அயல்நாட்டு மனிதர்களால் அனுகூலம் கிட்டும். ராகு / கேது / குரு கிரஹத்துக்கு விளக்கு ஏற்றி வழிபாடு செய்து வரவும்.



**கும்பம் :** மனக் குழப்பத்திலிருந்து விடுதலை கிடைக்கும் வாரம். நீண்ட தூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வராத நிலுவைகள் வந்து சேரும். வீடு / மனை வாங்க நேரிடும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். குழந்தை பாக்கியம் உண்டாகும். ராகு / கேது / குரு கிரஹத்துக்கு தீபம் ஏற்றி வழிபாடு செய்ய நற்பலன் உண்டாகும்.



**தனுசு :** சனி மாற்றம் ஏற்படும் வரை பொறுமையும் நிதானமும் அவசியம் தேவை. தெய்வ அனுகூலம் ஏற்படும். தடை விலகித் திருமணம் கைகூடும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். உடல் ஆரோக்கியம் சீராகும். நண்பர், உறவினர்களின் அனுகூலம் ஏற்படும். புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். ஆஞ்சநேயரை வழிபாடு செய்து வரவும்.



**மீனம் :** உல்லாசமான வாரம். நீண்ட தூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். குடும்ப வாழ்வில் மன மகிழ்ச்சி உண்டாகும். வேலையில் பதவி உயர்வு கிட்டும். பொன் பொருள், மனை, பூமி போன்றவை சேரும். கல்வி வளம் மேலோங்கும். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும்.

# டூர் போகலாம் வாங்க! கன்யாகுமரி

**வ**ங்காள விரிகுடா, இந்தியப் பெருங் கடல், அரபிக்கடல் எல்லாம் சின்ன வயசு சரித்திர, பூகோளப் புத்தகங்களில் அவ்வப்போது வந்துபோன பெயர்கள். அப்போது கடனே என்று படித்திருப்போம். பாதக மில்லை. இப்போது, ஒரு நடை கன்யா குமரி சென்றால், இந்த மூன்றும் சந்தித்து ஹாய் சொல்லிக்கொள்ளும் அபூர்வக் காட்சியைக் காணலாம். தவிரவும், அறியாத வயதில் சரித்திரத்துக்கு நாம் இழைத்த மாபெரும் பாவத்தைக் கழுவிக் கொள்ள இங்கே ஒரு முறை கால் நனைத்துவிட வேண்டியது அவசியம். ஐதீகமும் அப்படித்தான் சொல்கிறது.

பொழுது விடிந்தால் எல்லா இடங்களிலும்தான் சூரியன் உதிக்கிறது. ஆனால், கன்யாகுமரியில் நடப்பது போன்ற அற்புதக் கொண்டாட்டம் வேறு எங்காவது இருக்கிறதா? ம்ஹூம். வெட்கச் சிவப்புடன் தயங்கித் தயங்கிச் சூரியன் கடலிலிருந்து எட்டிப் பார்க்கும் அழகைச் சாப்பாடு, தண்ணீர் இல்லாமல் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

அதேபோல்தான் சூரிய அஸ்த மனமும். கருஞ் சிவப்பு, இளஞ் சிவப்பு, ஆரஞ்சு என்று கொஞ்சம் கொஞ்சமாக நிறம் மாறி, இறுதியில் கடலில் குதித்துக் காணாமல் போகும். 'ஜில்ஜில்' குளிர் காற்றை அனுபவித்தபடியே சூரியனுக்கு டாட்டா காட்டலாம்.

**ப**ரந்து விரிந்துள்ள 'கலர் கலர்' கடற் கரை மணல், குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அத்தனை பேரையும் ஆச்சரியப்பட வைக்கும். ஒரு பிளாஸ்டிக் பையில் அள்ளிக்கொள்ளலாமா என்று நினைக்கத் தூண்டும்.

திரும்பும் பக்கமெல்லாம் அமெரிக்கர் கள், பிரிட்டானியர்கள் மற்றும் தொலை தேச யாத்ரீகர்கள். முதுகுப் பையை மாட்டிக்கொண்டு சொல் பேச்சு கேட் காத குழந்தைகளைப்போல் அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருக்கிறார்கள். தவறாமல் எல்லோரிடமும் ஒரு பைனா குலர் இருக்கும். பிறகு, ஒரு தமிழ்நாடு வரைபடம். குட்டியாக ஒரு டைரி. அவரவருக்குத் தெரிந்த மொழியில் கவிதை எழுதுவார்களோ என்னவோ!

கடற்கரையை ஒட்டியதுபோல் அமைந்துள்ளது பகவதி அம்மன் கோயில். பார்வதி இங்கே இருந்தபடி சிவபெருமானை நோக்கி தவம் செய்ததாக நம்பத் தகுந்த வட்டாரங்கள் தெரிவிக்கின்றன. ஐதீகத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள்கூட தாராளமாக இந்தக் கோயிலுக்குள் எட்டிப் பார்க்கலாம். மோதித் தள்ளுவதுபோல் காற்று ஆக்ரோஷமாக வீசும்.

தாய்குலங்கள் இந்தக் குட்டி பாராவை ஸ்கிப்





# கடற்கரைக்கு ஒரு ஹாய்!

செய்துவிடுவது உத்தமம். பகவதி அம்மன் தன் மூக்கில் அணிந்திருக்கும் 'பளபள' வைர மூக்குத்தி மிகவும் பிரசித்தமானது. பல மைல்கள் வரை டாலடிக்கும் திறன் அதற்கு உண்டு. கண்டிப்பாக விற்பனைக்கு அல்ல.

அடுத்து, விவேகானந்தர் நினைவு மண்டபம். 1892-ல் இங்கே அமர்ந்து அவர் தவம் புரிந்திருக்கிறார். அப்படியே கொஞ்ச தூரம் நகர்ந்தால் காந்தி நினைவு மண்டபம். அற்புதமான வடிவமைப்பு. காந்திஜியின் பிறந்த நாளான ஒவ்வோர் அக்டோபர் இரண்டாம் தேதியும் அங்கே சூரிய ஒளி நேரடியாக வந்து விழும்.

சரித்திர ஆர்வலர்களின் கவனத்துக்கு. கடற்கரையிலிருந்து ஆறு கிலோமீட்டர் தள்ளிச் சென்றால், வட்டக் கோட்டையைத் தரிசிக்கலாம். பதினெட்டாம் நூற்றாண்டின் பிரமாண்ட கோட்டை. பூஞ்சையான அபார்ட்மெண்ட்களில் பயந்து பயந்து வசிக்கும் புண்ணியாத்மாக்கள், இந்தக் கோட்டைச் சுவரை ஆசை தீர தட்டிப் பார்த்துப் பொறாமைப்பட்டுக் கொள்ளலாம். கொஞ்சம் தள்ளினால், உதயகிரி கோட்டை. மார்த்தாண்ட வர்மா என்னும் மன்னர் கட்டியது.

பிறகு, திருவள்ளுவர். கொஞ்சம் நவீனமாக, இடுப்பைச் சாய்த்துக்கொண்டு ஸ்டைலாக நிற்கிறார். மேடை மட்டும் முப்பத்தெட்டு அடிகள். சிலையின் உயரம் 133 அடிகள். கடற்கரையின் எந்த மூலையிலிருந்து பார்த்தாலும் 'பளிச்'சென்று தெரிவார்.

கன்யாகுமரியில் ராத்திரி தூங்கும் போது, காதுக்குள்ளே கடல் புகுந்து விட்டது போல் சுகமான இரைச்சல் கேட்கும்.

ஹோட்டல்கள் எக்கச்சக்கம். கிளம்புவதற்கு முன்னரே, ஒரு ஃபோனைப் போட்டு புக் செய்துகொள்ள முடியும். இண்டர்நெட் மூலமாகவும் புக்கிங் செய்யலாம். சாப்பாடு வசதிகளுக்கும் குறைவில்லை. உலகின் எந்த மூலையிலிருந்தும் தங்கு தடையின்றி இங்கு வரலாம். மாட்டு வண்டி முதல் ஏரோப்ளேன் வரை சகலமும் உண்டு. என்ன புறப்பட்டாச்சா?

**- வ்ருத்திஸ்ரீ**

# அருள்வாக்கு

# மனம் குளிர...

பூரண சந்திரனைத் தியானிக்கிற போதே மனசும் அதுபோல் குளிர்ந்து போகிறது. அங்கே துக்கத்துக்கும் துவேஷத்துக்கும் இடமில்லாமல் சாந்தமாகிறது. வெளிப் பிரபஞ்சமெல்லாம் ஜீவனுக்குள்ளே இருக்கிறது. அண்டத்திலுள்ளதெல்லாம் பிண்டத்திலும் உண்டு என்பார்கள். சகல ஜீவராசிகளுக்கும் அந்தராத்மாவாக இருக்கிற பராசக்தியின் மனசே சந்திரனாக ஆகியிருக்கிறது. 'புருஷ ஸூக்த'த்தில் இப்படித்தான் சொல்லியிருக்கிறது. இதனால் ஜீவராசிகளின் மனத்துக்கும் சந்திரனுக்கும் சம்பந்தம் இருக்கிறது. ஆங்கிலத்தில் சித்தப் பிரமை பிடித்தவர்களை Lunatic என்கிறார்கள். Lunar என்றாலே சந்திரனைப் பற்றியது என்றுதான் அர்த்தம். இது சித்தத்தின் விபரீத நிலையைச் சந்திரனோடு சேர்த்துச் சொல்கிறது. சித்தசுத்திக்கு அதே சந்திர மண்டலத்தில் அம்பாள் தியானத்தை நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன.



சந்திரனில் அம்பாள் அமர்ந்திருப்பதாகத் தியானிக்க வேண்டும். தியானம் செய்கிறவனுக்கோ புலித்தோலை ஆசனமாக விதித்திருக்கிறது. சந்திரனுக்கு நேர் எதிராக புலி என்றால் உக்கிரமாக இருக்கிறது. புலி எப்படித் தன் இலட்சியமான இரையை ஒரே பாய்ச்சலில் பிடித்து விடுகிறதோ, அப்படி நம் தியான லட்சியத்தை மனசு விடாப்பிடியாகப் பிடித்துக் கொள்வதற்கே வியாக்ராஸனம் விதித்திருக்கிறது. அதில் அமர்ந்து அம்பாளைச் சந்திர மண்டல வாஸினியாக தியானித்தால், நம் மனமும் அவள் மனத்திலிருந்து வந்த சந்திரனைப்போல் குளிர்ச்சி அடையும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**



● காலை நேர வாக்கிங்...

“எங்கள் வீட்டு டைனிங் டேபிளில் எப்போதும் அரசியல் அரட்டைதான். எனக்கு ஐந்து சகோதரர்கள். அவர்களுடன் சில சமயங்களில் அனல் பறக்கும் வாக்குவாதம் நடக்கும். எங்கள் வீடு கிட்டத்தட்ட சட்டமன்றம் ஆகிவிடும். அப்பா தலையிட்டு அமைதியை நிலை நாட்டுவார். எனவே நேரடி அரசியலில் இல்லாவிட்டாலும், சிறு வயதிலிருந்தே அரசியல் உணர்வுடன் வளர்க்கப்பட்டவள் நான்'' என்கிறார் மறைந்த ஆலடி அருணாவின் மகளும், தமிழக சமூக நலத்துறை அமைச்சருமான பூங்கோதை.

காலை மணி ஆறு. சாஸ்திரி நகர் பத்தாவது குறுக்குத் தெருவில் இருக்கும் அமைச்சரின் வீட்டிலிருந்து காலை நடை துவங்கியது. கூடவே அமைச்சரின் கணவர் டாக்டர் பாலாஜி மற்றும் செல்ல நாய் ‘கோகி'. “ட்ரெட்மில், கொஞ்சம் யோகாசனங்கள் என்று செய்துவிட்டுத்தான் வாக்கிங் கிளம்புகிறேன்'' என்கிறார் அமைச்சர். கணவர் பாலாஜி வாஸ்க்யுலர் அறுவை சிகிச்சை நிபுணர். அமைச்சரோ லேப்ராஸ்கோப்பி சிகிச்சையில் நிபுணத்துவம் பெற்ற மகப்பேறு மருத்துவர். சென்னை மருத்துவக் கல்லூரியில் படித்தபோது காதல் அரும்பி, கல்யாணத்தில் முடிந்திருக்கிறது.

“நான் டாக்டராக பிராக்டீஸ் செய்த போதும் சரி, இப்போதும் சரி, என்னோட தினசரி அலுவல் காலை எட்டு மணிக்கே துவங்கிவிடும். சட்டமன்றம் நடக்கும் நாட்களில் வீட்டில் விஸிட்டர்ஸைப் பார்க்க முடியாது'' என்கிறார் அமைச்சர்.

இவருக்கு இரண்டு பெண்கள். சமந்தா, பாளையங்கோட்டையில் ப்ளஸ் டூ படிக்கிறார். காவ்யா சென்னை வித்யா மந்திர் பள்ளியில் நான்காம் வகுப்பு.

“நான் ஐந்து சகோதரர்களுடன் பிறந்தாலும் அப்பா என்னை மிக துணிச்சல் ஊட்டி வளர்த்தார். யாருடைய துணையும் இல்லாமல் வெளியிடங்களில் என் வேலைகளை நானே முடித்துக்கொள்வேன். இங்கிலாந்தில் ஒன்பது வருட காலம் தனியாகத்தான் தங்கிப் படித்தேன்'' என்று சொல்லும் அமைச்சர், “என் தந்தை சில காலம் தி.மு.க.விலிருந்து விலகி இருந்தாலும், கலைஞர் குடும்பத்தோடு தனிப்பட்ட முறையில் தொடர்ந்து நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது எங்கள் குடும்பம். தலைவர் என்றால் அப்பாவைப் பொருத்த அளவில் டாக்டர் கலைஞர் தான்'' என்கிறார்.

வாக்கிங் முடிந்ததும் வீட்டு முன்புறம் உள்ள புல்வெளியில் அமர்ந்து அன்றைய பத்திரிகைகளை ஒருதரம் புரட்டுகிறார். சிறு குழந்தைகள் ஊட்டச் சத்துக் குறைபாடு இல்லாமல் வளர்வதற்கான குறியிட்டை நோக்கி தமிழக அரசு செயல்பட்டுக் கொண்டிருக்கிறதாம். இதைக் குறிப்பிட்ட அமைச்சர் “தமிழகத்

# வீட்டுக்குள்ளே

தில் 15000க்கும் அதிகமான ஒருங்கிணைந்த குழந்தை வளர்ப்புத் திட்ட மையங்கள் இருக்கின்றன. பிறந்த குழந்தைகள், வளரும் குழந்தைகள், கர்ப்பிணித் தாய் மார்கள், பாலூட்டும் தாய்கள் மற்றும் இளம்பெண்களின் உடல் மற்றும் மூளை வளர்ச்சியில் முக்கிய பங்காற்றுகின்றன இந்த மையங்கள். இவற்றை மிகச் சிறப் பாகச் செயல்பட வைப்பதே என் நோக் கம். அடுத்து, உடல் ஊனமுற்றோர் நலனில் கவனம் செலுத்துகிறேன்'' என் கிறார்.

வாரத்தில் இரண்டு நாட்கள் தனது தொகுதியான ஆலங்குளத்தில் சுற்று கிறார் அமைச்சர். ''என் தொகுதியில் வரும் மானூர் ஊராட்சி ஒன்றியம் ரிசர்வ் செய்யப்பட்டதல்ல. அப்படி இருந்தும் தலைவர் பதவிக்கு ஒரு தாழ்த்தப்பட்ட தோழரை நிறுத்தி வெற்றி பெற வைத்தோம். மனதுக்குத் திருப்தி தந்த விஷயம் இது. மற்றபடி தாலுகா அலுவலகக் கட்டடங்கள், மின் பகிர்வு நிலையங்கள் என்று பல காரியங்களைத் தொகுதிக்குச் செய் திருக்கிறேன்'' என்று பூரிக்கிறார் அமைச்சர்.

இவர் தடுமாறுவது மேடைத் தமிழில்தான். ''பெரும்பாலும் ஆங்

## இங்கிலாந்தில் ஒன்பது வருடங்கள் தனியாகத் தங்கிப் படித்தேன்!

# சட்டமன்றம்!

# கோப்புகளை எப்படிப் பார்ப்பது என்று எனக்கு கற்றுத் தந்தது தலைவர் கலைஞர்தான்!



• டேஸ்ட் எப்படி...

கிலக் கலப்போடு பேசியே வந்ததால், சட்டசபையிலும், மேடையிலும் ஃபார்மலாகப் பேசுவது சற்று சிரமமாகத்தான் இருக்கிறது" என்கிறார். கோப்புகளை எப்படிப் பார்ப்பது என்று முதல்வர் கலைஞர்தான் இவருக்கு வழிகாட்டியிருக்கிறாராம். சென்னை, எம்.ஜி.ஆர். நகரில் வெள்ள நிவாரணம் கொடுக்கும்போது நெருக்கடியில் இறந்தவர்களின் மனைவிகளுக்கு, விதிகளைத் தளர்த்தி வேலை கொடுத்ததை பெரிய சாதனையாகச் சொல்கிறார் அமைச்சர்.

தன்னம்பிக்கை ஊட்டும் புத்தகங்கள், பொருளாதாரம் தொடர்பான புத்தகங்கள் இவர் விரும்பிப் படிப்பவை.

சட்டசபைக்குச் செல்லும்போது, சாஸ்திரி நகரில் உள்ள அங்கன்வாடி மையத்துக்குத் திடீர் விசிட் மேற்கொண்ட அமைச்சர், எல்லாச் சத்துணவு மையங்களுக்கும் காஸ் அடுப்பு கொடுக்க விருப்பதைக் குறிப்பிட்டார். அங்கு குழந்தைகளுக்காகத் தயார் செய்யப்பட்டிருக்கும் சத்துணவு மாவு உருண்டையை டேஸ்ட் பார்த்தார். அடுத்த விசிட் கச்சேரி சாலையிலுள்ள மகளிர் காப்பகத்துக்கு. விபசாரக் குற்றங்களின் பேரில் கைதாகும் பெண்கள் அங்கே வைக்கப்பட்டிருக்கின்றனர். நீதிமன்றம் ஆர்டர் போட்டும் விடுதலை செய்யப்படாமல் இருக்கும் பெண்களை உடனே தக்க பாதுகாப்புடன் வீட்டுக்கு அனுப்பி வைக்கச் சொல்கிறார் அமைச்சர்.

'ஜெயலலிதா அரசு கொண்டு வந்த தொட்டில் குழந்தைத் திட்டம் தொடர்கிறதே?' என்றால்,

"தொட்டில் குழந்தைத் திட்டம் என்பது பிரச்னைகளுக்கான நிரந்தரத் தீர்வு அல்ல. பெண்களுக்குக் கல்வி மற்றும் பிரசாரத்தின் மூலம் விழிப்புணர்வு ஏற்படும் பட்சத்தில் இந்தத் திட்டத்துக்கு அவசியமே இருக்காது. அந்த வகையில் இது ஒரு தாற்காலிகத் திட்டம்தான். எனவே சென்ற அரசு கொண்டு வந்தாலும் இப்போதும் நீடிக்கிறது" என்ற அமைச்சர் "தலைவர் கரெக்டாக வந்துவிடுவார்; அதற்குள் சென்று விட வேண்டும்" என்று படபடப்புடன் சட்டசபைக்குப் புறப்படுகிறார்.

- ஸ்ரீநி

படங்கள்: ராஜன்

• என்னம்மா நடக்குது?



29



வாரம் ஒரு பாசுரம்

# எனதுயிர் உனது

'ஆவி' என்ற சொல் அன்றாட வழக்கில் உள்ளது. நீராவி, ஆவி பிடிக்கிறது, உயிர் மூச்சு போன்ற பிரயோகங்கள்தான் அதிகம். நம்மாழ்வாரின் ஆவி சற்று வேறுபட்டது. அவரது ஆவி ஆத்மா.

ஆத்மா என்பது ஜீவனிலிருந்து வேறுபட்டது. நம் எல்லோரிடமும் இருக்கும் ஒரு சாஸ்வதம், ஒரு கடவுள் அம்சம் ஆத்மா. 'ஆவிசேர் உயிரினுள்ளால்' என்று நாம் முன்பு குறிப்பிட்ட பாடலில் ஆவி என்பது ஆத்மா. உயிர் என்பது பரமாத்மா. இரண்டுக்கும் உள்ள தொடர்பு என்ன? இதற்குத் திருவாய்மொழியில் பதிலளிக்க முயல்கிறார்.

*என்னது ஆவி மேலையாய்!*
*ஏர்கொள் ஏழ் உலகமும்*
*துன்விமுற்றும் ஆகிநின்ற*
*சோதிஞான மூர்த்தியாய்!*
*உன்னது என்னது ஆவியும்;*
*என்னது உன்னது ஆவியும்;*
*இன்ன வண்ணமே நின்றாய்*
*என்று உரைக்க வல்லேனே?*
*(துன்வி - நெருங்கி)*

**சுஜாதா**

'என்னுடைய ஆத்மாவைப் பெற்று ஏழு உலகங்களையும் நெருங்கி வியாபித்து முழுவதும் ஒளியாய், ஞான வடிவமாய் நிற்கிறாய். உன் ஆத்மா என்னுடையதாயும் என் ஆத்மா உன்னுடையது என்றும் என்னால் சொல்ல முடியுமா?'

இவ்வாறு கேட்டுவிட்டு அடுத்த பாட்டில் 'உரைக்க வல்லேன் அல்லேன்'- 'என்னால் உன் முடிவில்லாத கீர்த்தி வெள்ளத்தின் கரைக்கு என்று செல்வேன்?' என்கிறார்.

ஆழ்வார் இறைவனைத் தம் உயிராகக் கருதித் தம்மை இறைவன் வசமாக்கினார். விசிஷ்டாத்வைதக் கருத்துகளில் முக்கியமான ஒன்று இந்தக் கருத்து. பிரிவின்றிப் பிரபஞ்சமெங்கும் பரவியிருக்கும் ஆத்மாவும் நம்முள்ளே இருக்கும் ஆத்மாவும் வேறு வேறல்ல. நம்முள் இருக்கும் ஆத்மா, அந்த ஆத்மாவுடன் சேர்ந்துகொள்ளவே விரும்புகிறது. அதுதான் முக்திநிலை.

யாருமே சாவதில்லை; இரண்டற இறைவனுடன் கலந்துவிடுகிறோம்.

"பிரபஞ்ச ஆத்மாவும் நம்முள்ளே இருக்கும் ஆத்மாவும் வேறு வேறல்ல. நம்முள் இருக்கும் ஆத்மா, அந்த ஆத்மாவுடன் சேர்ந்து கொள்ளவே விரும்புகிறது!"

*(படிக்கலாம்)*

# பால்யத்தின் ஊற்று



இருக்கன்குடி மாரியம்மன்
கோயிலின்
சுடுமணலைக் கால் மாற்றி
ஓடிக் கடந்து
நாம் தோண்டிக் குடித்த
பால்யத்தின் ஊற்று
சுரந்தபடியே இருக்கிறது

கான்க்ரீட் தளங்களில்
காலணி அதிராதவாறு வந்து
நீ என்னைச் சந்திக்கும்
ஒவ்வொரு முறையும்
பாலிதீன் பைகளின்
சக்கைகளெனச் சலனமற்று
உரையாடுகிறாய்

குழந்தைமையின் வசீகரத்தை
மறைக்கும் உன்
யௌவனத்தின்
ஒப்பனையைக் கலைக்க
வெயிலாற நடக்கலாம்
வெளியே வா என்கிறேன்

உன் திடுக்கிடுதலில்
தொலைந்துபோனது
நம் கிராமத்து வெயில்

தமிழச்சி

# இளம் எழுத்தாளர்களுக்கு ஒரு வார்த்தை...!

சிறுகதை எழுதும் துறையில் இளம் எழுத்தாளர்கள் பலர் ஈடுபட்டு வருகிறார்கள். புதிய எழுத்தாளரின் தொகை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இது மகிழ்ச்சிக்குரியது.

புதிய எழுத்தாளர்கள் தாங்கள் மிகப் பிரயத்தனப்பட்டு எழுதிய சிறுகதைகளை மாதப் பத்திரிகைகளுக்கும் வாரப் பத்திரிகைகளுக்கும் அனுப்புகிறார்கள். அவற்றில் சில பிரசுரிக்கப்படுகின்றன. சில கதைகள் ஆசிரியரின் வந்தனத்துடன் திருப்பி அனுப்பப்படுகின்றன.

கதைகளைத் திரும்பப் பெற்றவர்கள் மனத்தில் அதிருப்தி ஏற்படுகிறது. அவர்கள் பத்திரிகை ஆசிரியர்களிடம் குறைபடுகிறார்கள். பத்திரிகை ஆசிரியர்கள் இளம் எழுத்தாளர்களை ஆதரிப்பதில்லை என்றும், அவர்களுக்கு ஊக்கம் அளிப்பதில்லை என்றும், மீண்டும் மீண்டும் ஒரு சில எழுத்தாளர்களின் கதைகளையே வெளியிடுகிறார்கள் என்றும் குறிப்பிடுகிறார்கள்.

ஒரு சில ஆரம்ப எழுத்தாளர்கள் வேறு பத்திரிகைகளில் வெளியான கதைகளை, கதாபாத்திரங்களின் பெயர்களை மட்டும் மாற்றிப் புதிதாகத் தாங்கள் எழுதியதுபோல் அனுப்பி விடுகிறார்கள். இன்னும் சிலர் முன்னம் வெளியான கதைகளில் சிற்சில நிகழ்ச்சிகளை மட்டும் மாற்றி எழுதி அனுப்பி விடுகிறார்கள். அத்தகைய கதையைத் திருத்தம் செய்து வெளியிட்டால், கதை அந்த எழுத்தாளர் ஏற்கெனவே பார்த்து எழுதிய மூலக் கதையின் உருவத்தைப் பெற்று விடுகிறது.

பல பத்திரிகைகளைப் படிக்கும் வாசக நேயர்கள் 'இந்தக் கதை இன்ன தேதியில், இன்ன பெயரில், இந்தப் பத்திரிகையில் வெளியானது' என்று கடிதம் எழுத ஆரம்பித்துவிடுகிறார்கள்.

பத்திரிகைகளில் கதைகள் வெளியிடுவதற்கு உதவி ஆசிரியர்கள் கதைகளைப்



# உதவி ஆசிரியர்கள் எவ்ளோ பாவம்னு இப்பத்தான் தெரியுது...

பொறுக்கி எடுக்கிறார்கள். ஏற்கெனவே வெளியான கதை என்பது வாசக நேயர்களுக்குத் தெரியும்போது, உதவி ஆசிரியர்களுக்குத் தெரியாமலா போய் விடும் என்ற கேள்வி எழுகிறது.

ஆம்; உதவி ஆசிரியர்களுக்குச் சில சமயம் தெரியாமல்தான் போய் விடுகிறது. அதற்குத் தகுந்த காரணம் இருக்கிறது. சற்றுப் பிரபலம் அடைந்த பத்திரிகைகளுக்கு நூற்றுக்கணக்கான சிறுகதைகள் புதிய இளம் எழுத்தாளர்களிடமிருந்தும் வழக்கமாக எழுதும் பழைய எழுத்தாளர்களிடமிருந்தும் வாரந்தோறும் வருகின்றன. இவ்வளவையும் உதவி ஆசிரியர்கள் படித்து, வெளியிடத் தகுதியானவற்றைப் பொறுக்கி எடுக்க வேண்டி வருகிறது.

வருஷக்கணக்கில் பார்க்கும்போது இவ்வாறு உதவி ஆசிரியர்கள் படிக்கும் கதைகள் ஆயிரக்கணக்கில் போய் விடுகின்றன.

இவற்றுடன் வேறு பத்திரிகைகளில் வெளியாகும் கதைகளையும் உதவி ஆசிரியர்கள் படிக்க வேண்டியிருக்கிறது.

ஆகவே, எந்தக் கதையைப் படித்தாலும், "முன்னே எங்கேயோ படித்த மாதிரி இருக்கிறதே!" என்று தோன்றுகிறது. சமூகக் கதைகள், குடும்பக் கதைகள், கிராம வாழ்க்கைக் கதைகள் எல்லாவற்றிலும் சில நிகழ்ச்சிகள் ஒரே மாதிரியாகத்தான் இருக்கின்றன. சில சமயம் கதைப் போக்கும் ஒன்று போல இருக்கும். எழுதும் முறையிலேதான் வித்தியாசம் இருக்கும்.

வாசக நேயர்களுக்குக் கையெழுத்துப் பிரதிகளைப் படிக்கும் கடமை இல்லை. பத்திரிகைகளிலே அச்சிட்டு வெளியாகும் கதைகளை மட்டும் படிக்கிறார்கள். ஆகையால், அவர்களில் சிலருக்கு இந்தக் கதை, இந்தப் பத்திரிகையில் முன்னமே வந்தது என்பதைத் திட்டமாக உடனே கண்டுபிடிக்க முடிகிறது. உதவி ஆசிரியர்களுக்கு இந்தச் சௌகரியம் கிடையாது.

ஆகையால், கதை எழுதி அனுப்புகிறவர்கள் எல்லாம் சொந்தக் கற்பனையினால் எழுதுகிறார்கள் என்ற நம்பிக்கையின் அடிப்படை பேரில்தான் அவர்கள் கதைகளைப் பரிசீலனை செய்து பொறுக்க வேண்டியிருக்கிறது.

இந்த நிலைமையில், இரண்டொரு எழுத்தாளர்கள் பழைய கதைகளைப் பெயர்த்து எழுதி அனுப்பி, அவை பிரசுரிக்கப்பட்டுவிட்டால் பத்திரிகையின் நல்ல பெயர் பாதிக்கப்படுகிறது.

இம்மாதிரி நேரிடாமல் தடுக்க ஒரு வழி உண்டு. நன்றாகப் பழக்கமான பழைய எழுத்தாளர்களின் கதைகளையே பிரசுரிப்பது என்று வைத்துக்கொண்டால், வேறு பத்திரிகைகளில் வெளியான பழைய கதைகளையே மீண்டும் பிரசுரிக்கும்படியான நிலைமை ஏற்படாது. ஆகையினாலேதான் சில பத்திரிகைகளில் வழக்கமாக எழுதும் எழுத்தாளர்களின் கதைகளே வெளியாகின்றன. இவ்வாறு இரண்டொருவர் செய்யும் முறையற்ற வேலைகள், புதிதாகக் கதை எழுதத் தொடங்கும் இளம் எழுத்தாளர்கள் அனைவரையும் பாதிப்பதாக இருக்கின்றன.

*- ஜனவரி 31, 1954 கல்கி இதழிலிருந்து*

**அமரர் கல்கி**

# குழப்பங்களும் குளறுபடிகளும்!

இந்த இதழைப் புரட்டிக் கொண்டிருக்கும் இந்தக் கணத்தில் 2007 உலகக் கோப்பை கிரிக்கெட்டின் முடிவுகள் முழுவதுமாக உங்களுக்குத் தெரிந்திருக்கும். இந்தியா தோற்ற பிற்பாடும் விடிய விடியப் பார்த்த முக்கியமான மேட்சுகள், மறக்க முடியாத சிக்ஸர்கள், ஸ்டம்பை டான்ஸ் ஆட வைத்த பவுலர்கள், பறவையாகப் பறந்து பிடித்த கேட்சுகள், மந்திரா பேடியின் இனிய சொற்பொழிவுகள் எல்லாமே இன்னும் சிறிது நாளைக்கு உங்களைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டுதான் இருக்கும்.

இங்கே இந்திய கிரிக்கெட்டில் தொடர்ந்து காட்சிகள் இடம்மாறிக் கொண்டிருக்கின்றன. ட்வெண்டி ட்வெண்டி கிரிக்கெட் போட்டி முதல் தடவையாக இந்தியாவில் நடந்து முடிந்திருக்கிறது. டெண்டுல்கர், டிராவிட், கங்கூலி, யுவராஜ் சிங் போன்ற பெரிய தலைகள் எல்லாம் விழுந்தடித்துக் கொண்டு கலந்து கொண்டனர். சப்தமே இல்லாமல் தமிழக அணி கோப்பையைத் தட்டிச் சென்றாலும் இதனால் தமிழ்நாடு கிரிக்கெட் அணியின் தலையெழுத்து பெரிதாக மாறப்போவதில்லை. வங்காளத்தைச் சேர்ந்த மனோஜ் திவாரியின் சேர்க்கைக்காக குரல் கொடுக்க ஒரு கூட்டமே இருக்கிறது. ஆனால், தமிழ்நாட்டைச் சேர்ந்த பத்ரிநாத் தொடர்ந்து ஏமாற்றத்துக்கு ஆளாகி வருகிறார், கேட்பாரில்லை. தொடர்ந்து இன்ஜுரியில் இருக்கும் பாலாஜியை விசாரிக்கும் எண்ணமும் யாருக்கும் இல்லை. இந்திய கிரிக்கெட் அணி மேப்பிலிருந்து மெள்ள மெள்ள மறைந்து கொண்டிருக்கிறது தமிழ்நாடு.

வரவர இந்திய கிரிக்கெட் அணிக்கும் அரசு அலுவலகங்களுக்கும் பெரிய வித்தியாசம் இல்லாமல் போய்விட்டது. செயலில் பூஜ்யமாக இருந்தாலும் சலுகைக்காக முன் வரிசையில் நிற்கத் தவறுவதில்லை. வீரேந்திர ஷேவாக் இதற்கு சிறந்த உதாரணம். டெண்டுல்கர், கங்கூலியைப் போய் யாராவது நீக்க முடியுமா என்று இந்தியா டைம்ஸுக்கு அளித்த பேட்டியில் ஒரு வார்த்தை விட்டிருக்கிறார் கருணை மனசுக்காரரும் தேர்வுக் குழுத் தலைவருமான வெங்சர்க்கார். செய்கிற பணிக்குத் தேவையற்ற குணங்களான இரக்கம், பரிவு, பச்சாதாபம் எல்லாமே இவரிடம் கனகச்சிதமாகக் குடிகொண்டுள்ளது.

'இளரத்தங்களாப் பார்த்து பங்களாதேஷ் டூருக்கு அனுப்புங்கப்பா' என்ற கட்டளைக்கு அடிபணிந்து முப்பது வயது தினேஷ் மோங்கியா தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். பேருக்காக வங்காளத்தைச் சேர்ந்த திவாரி ஒண்டேவுக்கும், ராஜேஷ் பவார் (ரமேஷ் பவார் அல்ல) டெஸ்டுக்கும் தேர்வாகியிருக்கிறார்கள். அச்சு மற்றும் மின்னணு ஊடகங்கள் அரை டஜன் இளைஞர்களைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்தினாலும் எதையும் சட்டை செய்யவில்லை வெங்சர்க்கார். இவர்களை பங்களாதேஷ் டூருக்குத் தேர்வு செய்யவே யோசிக்கும் நிர்வாகம், இதர டூர்களுக்கு மட்டும் எப்படித் தேர்ந்தெடுக்கப் போகிறது என்பதை



* மனோஜ் திவாரி



* கிரேக் சாப்பல்



* வெங்சர்க்கார்



* கிரண் மோரே



* தினேஷ் கார்த்திக்

நினைக்கும்போதே பல வீரர்களின் வாழ்க்கையில் மண் வந்து விழுகிறது. முன்னாள் தேர்வுக் குழுத் தலைவரான மோரே, இந்திய அணித் தேர்வைப் பார்த்து ஆச்சர்யப்படுகிறார். 'இந்திய அணிக்கான தேர்வுகள் முக்காலுக்கு மேல் புரியாமல் இருக்கிறது. விஸ்தாரமான திட்டம் வெங்சர்க்காரிடம் இல்லை. அடுத்து இந்தியா, இங்கிலாந்து டூர் செல்லப்போகிறது. உலகக் கோப்பைக்காக ஆடிய எல்லா வீரர்களும் அப்போது தேர்வுச் செய்யப்படுவார்கள் பாருங்களேன்' என்று தீர்க்கதரிசனம் கொடுக்கிறார்.

தினேஷ் கார்த்திக் நன்றாக இருப்பது யாருக்கும் பிடிக்கவில்லை. டெஸ்ட் மேட்சில் அவர்தான் ஸ்பெஷலிஸ்ட் ஓப்பனராம். இங்கிலாந்து டூருக்கும் சேர்த்து இந்த ஏற்பாடு. பங்களாதேஷ் டூரில் நடக்கும் ஒண்டே மேட்சுகளில் ஷேவாக் தப்பித்தவறி செஞ்சுரி அடித்துவிட்டால், இங்கிலாந்து டூருக்கும் அவர் தேர்வாக மாட்டாரா என்ன? ஓப்பனர் என்று ஆசைகாட்டி க்ளோஸ் ஆன வீரர்கள் பட்டியலில் தினேஷ் கார்த்திக் இடம் பிடிக்காமல் இருக்க வேண்டுவீர்.

அப்துல் கலாமுக்கு இணையாக இந்திய இளைஞர்கள் மீது நம்பிக்கை வைத்திருந்தவர் கிரேக் சேப்பல். அவரை வீட்டுக்கு அனுப்பிவிட்டு தன்னிஷ்டம் போல் செயல்படுகிறது பி.சி.சி.ஐ. பணியிடங்களில் அசுர உழைப்பாளிக்கு மட்டுமே 'ரெஸ்ட்' கொடுக்கப்படும். ஆனால், இந்திய அணியில்தான் முட்டை போட்டவர்களுக்கும், பாசஞ்சர் ரயில் வேகத்தில் ஆடியவர்களுக்கும் ரெஸ்ட் கொடுக்கப்பட்டு, அவர்களுக்குச் சகாயம் உண்டாக்குகிறது பி.சி.சி.ஐ. இனி வெங்சர்க்கார் என்றால் வெங்காயம் என்று அர்த்தம் இட்டுக்கொள்ளலாம்.

**- ச.ந.கண்ணன்**

**வே**ண்டுமென்றேதான் அவனுக்கு இனிய தமிழ் அசைவ உணவகத்தில் ஒரு வேளை சாப்பிட்டுவிட்டுப் போனாலென்ன என்று தோன்றியது. முதலில் அங்கே சாப்பாடு. பிறகு இருபத்து மூன்று சி பிடித்து எழும்பூர். ஆல்பர்ட் தியேட்டரில் இறங்கி நாலு தப்படி நடந்தால் சாந்தியின் குடிசைப் பகுதி. ஏனோ ஊருக்குப் போவதற்கு முன் ஒருமுறை பார்த்துவிட்டுப் போகலாம் என்று நினைத்தான்.



திடீரென்று வாழ்க்கையில் ஒரு பெண். எதிர்பாராதது என்று சொல்வதற்கில்லை. ஆனால், நினைக்கும் தருணமெல்லாம் மெல்லிய இனிப்புப் படலம் ஒன்று நெஞ்சுக்குள் படர்ந்துவிடுகிறது. வயது செய்கிற மாயம்.

தயக்கமும் பயமும் எதிர்காலம் குறித்த நிச்சயமின்மையும் எப்போதும் உடனிருந்தாலும் நினைவின் மிருதுத் தன்மையை அவற்றால் எதுவும் செய்ய முடியவில்லை. ஆமாம், என்ன பெரிய பயம்? ஆமாம், என்ன பெரிய எதிர்காலம்? ஆமாம், என்ன பெரிய கஷ்டம்? எதையும் சமாளித்துவிட முடியும் என்றுதான் எப்போதும் தோன்றுகிறது. சாந்தி குறித்து நினைக்கும்போதெல்லாம். ஆனால், நேரில் சந்தித்த இரண்டு தருணங்களிலும் பைத்தியம் மாதிரி உளறியிருக்கிறான். தனது அச்சத்தை எடுத்து அவளுக்குள் விதைக்கத்தான் பார்த்திருக்கிறான். ஏன் இப்படி? அவனுக்குப் புரியவில்லை.

இனிய தமிழ் அசைவ உணவகத்தில் இருந்தான். அரை ப்ளேட் பிரியாணி சொல்லிவிட்டுக் காத்திருக்கும்போது இதெல்லாம் நினைவுக்கு வந்தன. கூடவே வட்டச் செயலாளர் ஊருக்கு வந்துவிட்டாரா, அதைப் பற்றிய சூசகத் தகவல் ஏதும் அங்கே கிடைக்குமா என்றும் பார்த்துக் கொண்டிருந்தான். செய்யப்போவது மிகப்பெரிய காரியம். வட்டச் செயலாளர் அளவில் அது ஓர் அத்துமீறல். முத்துராமனைக் கூப்பிட்டு எம்.எல்.ஏ. இரண்டொரு முறை பேசியிருக்கிறார் என்கிற தகவலே அவர் விரும்பக்கூடியதாக இருக்க முடியாது. எதிரே கைகட்டி நிற்கிறவரை மட்டுமே நம்பிக்கைகள் கட்டிக் காக்கப்படுகிற துறை. கட்டிய கையை இறக்கினால் எதிரி; நகர்ந்துபோய் நின்றால் துரோகி.

தன்னை அவர் என்ன வேண்டு

# கொசு

**பா.ராகவன்**

## 17

மானாலும் நினைத்துக்கொள்ள முடியும். 'ஆனால் தலைவரே, நான் துரோகியோ, எதிரியோ அல்ல. உங்களைப் போலவே அரசியலில் முன்னுக்கு வரத் துடிக்கும் ஒரு சராசரி கனவு சுமப்பாளன். ஒரு தேர்தல் வாய்ப்பு. போதும். நிரூபித்துவிட முடியும். தோற்கவே நேர்ந்தால்கூட மிகப்பெரிய அளவில் ஒரு கவன ஈர்ப்பைத் தந்துவிட முடியும். முத்துராமன் போராளி. உழைக்கத் தெரிந்தவன். அடுத்த முறை கரை சேர்ந்து விடுவான். போதும்; பிழைத்துக்கொண்டு விடுவேன்.'

சாப்பிட்டு முடிக்கும் வரை வட்டம் வந்து விட்டதற்கான அறிகுறி ஏதும் தெரியவில்லை. வெளியே வந்தான். 'ஒருவேளை வட்டம் அங்கே இருந்து, என்ன இப்படி என்று கேட்டிருந்தால்... கண்டிப்பாக, திருநெல்வேலி போகிற விஷயத்தைச் சொல்லியிருக்க மாட்டோம். பொதுவில் ஊருக்குப் போவதாகச் சொல்லியிருக்கலாம். அல்லது வேறேதாவது. ஆனால், கண்டிப்பாக மாநாடு தொடர்பாக ஏதாவது பேசி, அவர் வாயிலிருந்து வெளிவரும் எந்தச் சொல்லையும் பத்திரமாகச் சேமித்து, எம்.எல்.ஏ.விடம் சொல்லியிருப்போம்' என்று பட்டது. பதற்றம் அதிகரித்தது.

முத்துராமன் எழும்பூரில் இறங்கி, சாந்தியின் குப்பத்தை நெருங்கினான். ரயிலுக்கு இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறது. அதற்குள் பத்து நிமிடமாவது சாந்தியிடம் தனியாகப் பேச முடிந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது.

'சாந்தி, ஒன்று சொல்கிறேன். ஒரு லட்சியத்துடன் மிகப்பெரிய காரியத்தில் இறங்கியிருக்கிறேன். நினைத்தது நடந்தால் மேலே சென்றுவிடுவேன். நடக்காது போனால் தையல் மிஷினும் குடிசையும் குப்பமும் எப்போதும் இருக்கிறது. அதை நம்பித்தானே என்னுடன் வாழச் சம்மதித்தாய்? அது எப்போதும் இருக்கிறது. ஆனால் எனக்கொன்று தருவாயா? உன் நம்பிக்கையை. உன் வாழ்த்தை. உன் புன்னகையை. நான் ஜெயிப்பேன் என்று நீ ஏன் சொல்லக்கூடாது? உன் மனத்திலிருந்து அந்தச் சொல் பொங்கி வெளியேறும்போது என் சக்தி அதிகரிக்கும் என்று தோன்றுகிறது.'

"சரி, ஜெயிச்சிட்டு வாங்களேன்? அதுக்கென்ன இப்போ?" என்று சாந்தி கேட்டாள். வீட்டில் அவளைத் தவிர வேறு யாருமில்லை. அது முத்துராமன் எதிர்பாராதது. அப்பாவும் அம்மாவும் பெரம்பூர் அத்தை வீட்டுக்குச் சென்றிருப்பதாக சாந்தி சொன்னாள். தங்கை வழக்கம்போல் ஆல்பர்ட் தியேட்டருக்கு பாப்கார்ன் எடுத்துச் சென்றிருப்பதாக.

'மிகப்பெரிய வாய்ப்பு. அன்புள்ள சாந்தி, சற்று புரிந்துகொள். நான் எதிர்பார்ப்பது இப்படிப்பட்ட சொற்சேர்க்கைகளை அல்ல. உன் ஆத்மார்த்தமான விருப்பம். அதன் சரியான வெளிப்பாடு. கடவுளே, எப்படி உனக்குப் புரியவைப்பேன்?'

அவன் தவிப்பு அவளுக்குச் சொற்களற்றுப் புரிந்திருக்க வேண்டும். ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

"இந்தா பாருங்க... எனக்கு நீங்க பேசற அரசியலெல்லாம் புரியாதுங்க. நான் படிக்காதவ."

"நானும் படிக்காதவன்தான்,

சாந்தி. நம்மனவங்க யாரு படிச்சிருக்காங்க? அட, அரசியல்ல இருக்கறவங்கள்லயே முக்காவாசி படிக்காத தற்குறிங்கதான். என்னா கெட்டுப் போவுது? சனங்களுக்கு எதனா செய்யணும். நாமளும் நல்லா இருக்கணும்; நாலு பேரு நல்லா இருக்கணும். இப்பிடி நெனைக்கறவனுக்கு வாய்ப்புதான் வோணும்; படிப்பெல்லாம் வாணா."

"ஓஹோ" என்றாள் சாதாரணமாக.

அவனுக்கு அந்த 'ஓஹோ' புரியவில்லை. பதிலுக்கு எங்கே தொடங்கலாம் என்று 'சட்'டென்று பிடிபடவில்லை.

"ஒருவேளை கல்யாணத்துக்கு முந்தியே நான் ஒரு எம்.எல்.ஏ.வா இருந்



**பொதுவாகப் பெண்களைப் புரிந்து கொள்வது அத்தனை யொன்றும் எளிதில்லை என்றே தோன்றியது. புரிந்து கொள்ள முயற்சி செய்யாமலேயே வாழ்ந்து முடித்து விடுவது தான் பெரும்பாலானோர் செய்வது.**

திருந்தா நீ என்னா நெனைச்சிருப்ப?" என்று கேட்டான்.

அவள் புன்னகையுடன் சில கணங்கள் அவனை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு சொன்னாள்:

"சொல்றேன்னு தப்பா நெனச்சிக்காதீங்க. அப்பிடி நீங்க எம்.எல்.ஏ. லெவலுக்குப் போயிருந்தீங்கன்னா, இந்தக் குப்பத்துக்கு ஏன் வந்து பொண்ணு எடுக்கப் போறீங்க? உங்க ரேஞ்சுக்கு வேற யாரையானாத்தான் பாத்திருப்பீங்க."

சரியென்றிருந்தது. எவ்வளவு பெரிய உண்மை! ஆனால், உடனடியாக மறுக்கத்தான் தோன்றியது.

"சேச்சே... என்ன பேசுறே? அந்தஸ்து வந்ததும் அடியோட மாறிடற ஆள் இல்லம்மா நானு. எத்தினி ஒசரத்துக்குப் போனாலும் எங்க குப்பத்துலதான் என்னிக்கும் வாசம். நம்ம கஸ்டநஸ்டம் தெரிஞ்ச பொண்ணாத்தான் பாத்துக் கட்டிக்கிடணும்னு இத்தன வருசமா வெயிட் பண்ணிட்டிருந்தவன். ஆனா, நீ திடீர்னு இப்பிடிச் சொல்லிட்டியே..."

"நான் ஒண்ணும் தப்பா சொல்லலீங்க. அப்படியே நீங்க கொஞ்சம் பணக்காரப் பொண்ணா பாத்துக் கட்டிக்கிட்டாலும் தப்பில்லன்னு சொல்ல வந்தேன்."

அவனுக்கு சாந்தியைப் புரியவில்லை. பொதுவாகப் பெண்களைப் புரிந்து கொள்வது அத்தனையொன்றும் எளிதில்லை என்றே தோன்றியது. புரிந்துகொள்ள முயற்சி செய்யாமலேயே வாழ்ந்து முடித்து விடுவதுதான் பெரும்பாலானோர் செய்வது. ஆனால், எந்தப் பெண்ணும் சற்றும் உணர்ச்சிவசப்படாமல் அனைத்தையும் செய்தியின் தொனியிலேயே உள்வாங்கி வெளிப்படுத்துவாள் என்று அவனுக்குத் தோன்றவில்லை. விமர்சனங்களற்ற பெண்களை அவன் சந்தித்ததில்லை. அம்மா. பெரியம்மாக்கள். சித்திகள். அவனறிந்த உலகில் வாழும் பெண்கள் அனைவரும் விமர்சனங்களால் செய்யப்பட்டவர்கள். இது சரியில்லை, அது கோணல். இது தவறு. அது குற்றம். எனில் எது சரி, எது உன்னதம்?

அவனுக்கு அபிப்பிராயங்களைவிட ஆதரவும் அரவணைப்பும்தான் மேலதிகம் தேவைப்பட்டது. தன் தவிப்புகள் புரிந்த ஒரு ஜென்மமாக சாந்தி ஏன் இருக்கக்

கூடாது என்று நினைத்தான். எத்தனை அபத்தம்! தனக்கும் அவளுக்கும் நேற்று வரை ஒரு தொடர்பும் கிடையாது. எனில், எப்படி என் தவிப்புகளை அவள் புரிந்து கொள்ள முடியும்? திருமணம் என்பது ஓர் ஏற்பாடு. சமூக ஏற்பாடு. அது நடந்தபிறகு விதிக்கப்பட்ட வாழ்வின் எல்லைகளுக்குள் அவள் ஓடியாடப் பழகிவிடக்கூடும். அதற்கு முன்பே எதிர்பார்ப்பது தன் தவறு தானோ?

"சரி, நான் கௌம்புறேன் சாந்தி. ரயிலுக்கு நேரமாச்சி. விடிஞ்சா பாளை யங்கோட்டைல இருக்கணும். எம்.எல்.ஏ. ஒரு முக்கிய காரியமா அனுப்புறாரு. நல்லபடியா முடிச்சிட்டு வரணும். போறதுக்கு முன்னால உன் னாண்ட சொல்லிக்கினு போலாம்னு தான் வந்தேன்.'

"ஒரு நிமிஷம்" என்று உள்ளே போனவள், திரும்பி வரும்போது சற்று 'பளிச்'சென்று இருந்தாள். "வாங்க... நானும் கூட வரேன்" என்று புறப்பட்ட வளை வியப்புடன் பார்த்தான் முத்துராமன்.

"நெசமாவா? ரயில்வே ஸ்டேச னுக்கா?"

"ஆமா...வாங்க..."

"உங்க வீட்ல தேடமாட்டாங்க?"

"எங்கம்மா வர டயம் ஆவும். தங் கச்சி வந்தா பக்கத்தூட்ல டீ.வி. பாக்கப் போயிருவா. நீங்க வாங்க."

வழியெங்கும் முத்துராமனுக்குத் தரிக்கவில்லை. பரபரவென்று என் னென்னவோ தோன்றியது. 'இதைத் தான், இதைத்தான் சாந்தி எதிர்பார்க் கிறேன். நீ என் உடன் வரவேண்டு மென்பதுகூட இல்லை. வரத் தயார் என்று சொன்னால் போதும். நான் ஜெயிக்க வேண்டுமென்று நீ விரும்பக் கூடத் தேவையில்லை. ஆனால், ஜெயிப் பேன் என்று சொன்னால் போதும்.'

சந்தோஷ மிகுதியில் அவனுக்குப் பேசவே தோன்றவில்லை. ப்ளாட் பாரத்தை அடைந்து வண்டியில் ஏறி உட் காரும்வரை ஒரு சொல்கூடப் பேச வில்லை. வண்டி புறப்படுவதற்கான விசில் ஊதப்படும் சத்தம் கேட்டது. 'சே, எத்தனை அபத்தம்!' என்று நினைத்தவனாக, பரிதவிப்புடன் ஜன்



னலுக்கு வெளியே சாந்தியைப் பார்த்தான்.

"போயிட்டு வரேன், சாந்தி. வந் ததும் உன்னை வந்து பாக்குறேன். அப்பாவாண்ட சொல்லு. நீ வந்தது மெய்யாலுமே எனக்கு ரொம்ப சந்தோசமா இருக்குது."

அவள் பேசாதிருந்தாள். ஏதோ யோசிப்பதுபோலப் பட்டது. வண்டி மெள்ளப் புறப்பட்டபோது சொன் னாள்: "நீங்க அரசியல்வாதி ஆனா லும் டெய்லராவே இருந்தாலும் எனக்கு ஒண்ணுதாங்க. என்னா ஒண்ணு, தப்புதண்டா பக்கம் போவாம நாம உண்டு, நம்ம குடும் பம் உண்டுன்னு நல்லவராவே கடேசிமுட்டும் இருந்துட்டீங்கன்னா அதுவே போதும்!"

*(தொடரும்)*

# விஜய்னாலும் வேண்டாம்!



''ரொம்ப நேரமா ஏதோ யோசனையில நிக்கிறியே... என்ன வேணும் உனக்கு?''

''நூறு ரூபாய் அவசரமா தேவைப்படுது! அதான் கடனா கேட்கலாமா இல்ல அடிச்சுப் பிடுங்கலாமான்னு யோசனை பண்ணிட்டிருக்கேன்!''

- பெ.கலாசாமி

''பொண்ணு பார்க்கறப்போ இருந்ததுக்கும் இப்போ இருக்கறதுக்கும் இடையே என் மனைவிகிட்டே ஏகப்பட்ட மாறுதல்கள்.''

''அப்படியா?''

''ஆமாம்... பொண்ணு பார்க்கப் போனப்போ அவளே காஃபியெல்லாம் கொண்டு வந்து கொடுத்தாளே...''





''வரன் விஜய் மாதிரின்னு சொல்லியும் வேண்டாம்னுட்டியாமே.... ஏண்டி?''

''அவன் சுத்த போக்கிரியாம்!''

- அம்பை தேவா



''வறுமையைப் பத்தி படம் எடுத்தீங்களே... எப்படி வந்திருக்கு...?''

''ரொம்ப 'ரிச்சா' வந்திருக்கு சார்!''

- கே.ஆனந்தன்

# தகுதி இருந்தால் தானாகத் திறக்கும்!

**படித்த, படிக்காத இன்றைய இளைய தலைமுறையின் பெரிய சவால் வேலை வாய்ப்பு. வேலைக்கு மனு அனுப்புவதிலிருந்து, கிடைத்த வேலையைத் தக்கவைத்துக்கொள்வது வரை பல தடைகளைத் தாண்டி வரும் நிலை. அதைச் சமாளித்து வாழ்க்கையை வெற்றிகரமாக அமைத்துக்கொள்வது எப்படி? பள்ளி, கல்லூரிகளில் கல்வி மற்றும் வேலைவாய்ப்பு குறித்து கவுன்ஸெலிங் நடத்தும் விஜயகுமாரிடம் கேள்வி மேல் கேள்வி கேட்கிறார்கள் ஷாலினியும், பாரத்குமாரும்...**

**ஷாலினி :** என்னைப் போன்று தகவல் தொழில்நுட்பத்தில் பி.ஈ. பட்டம் பெற்றவர்கள் தக்க வேலைவாய்ப்பைப் பெறுவது எப்படி?

**விஜயகுமார் :** வேலை தேடுபவர்கள் முதலில் தங்களைப் பற்றிய பயோடேட்டாவை ஒழுங்காகத் தயாரிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். படிப்பு தொடர்பாக குறிப்பிடும்போது உச்சகட்ட படிப்பை முதலில் குறிப்பிட வேண்டும். அனுபவத்தைப் பற்றிச் சொல்லும்போது கடைசியாக வேலை செய்த நிறுவனத்திலிருந்து குறிப்பிட வேண்டும். ஏனென்றால் நீங்கள் பத்தாண்டுகளுக்கு முன் என்ன செய்தீர்கள் என்பதைவிட, சமீபத்தில் என்ன செய்தீர்கள் என்பதைத்தான் பார்ப்பார்கள். உங்களுடைய மற்ற விருப்பங்களைக் (extra curricular) கண்டிப்பாகக் குறிப்பிடுங்கள். ஏனென்றால் தங்களிடம் வரும் ஊழியர், வேலை மனப்பான்மையுடன் மற்ற தகுதிகளையும், பெற்றிருப்பதை நிறுவனங்கள் மிகவும் விரும்புகின்றன. வேலைவாய்ப்பு குறித்த வலைதளங்கள் மற்றும் பத்திரிகைகள் இப்போது நிறையவே வருகின்றன.

**பாரத்குமார் :** எங்களைப் போன்ற இளைஞர்களின் முக்கியப் பிரச்னையே இண்டர்வ்யூக்களை எப்படிச்







● ஷாலினி

சந்திப்பது என்பதுதான்...

**விஜயகுமார் :** பல்கலைக்கழகத்தில் ரேங்க் வாங்கிய மாணவன் கூட நேர்காணல் என்றால் நடுநடுங்கிப் போகிறான். கம்யூனிகேஷன் திறமை குறைவாக இருப்பதுதான் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசத் தெரியாமல் தவிப்பதற்கான காரணம்.

இதனாலேயே, நேர்காணலில் தடுமாற்றம் ஏற்பட்டு வருகிறது. எனவே ஆங்கிலப் புலமையை வளர்த்துக் கொள்ளுங்கள். அந்த மொழியில் சரளமாகப் பேசக் கற்றுக் கொள்ளுங்கள். இப்போதெல்லாம் இவற்றில் பயிற்சி கொடுக்க நிறையவே நிறுவனங்கள் வந்து விட்டன. எஸ்.எஸ்.எல்.சி. படித்த ஒரு மாணவன், நன்றாக ஆங்கிலம் பேசுவான். கல்வித் தகுதியைப் பார்க்காமல் ஒரு பி.ப்பி.ஓ. நிறுவனத்தில் வேலைக்கு எடுத்துக் கொண்டார்கள். சம்பளம் 15,000 ரூபாய்.

**பாரத்குமார் :** ஆங்கிலம் தெரிந்தால் மட்டும் நேர்காணலில் வெற்றியடைந்துவிட முடியுமா?

**விஜயகுமார் :** அதுவும் முக்கியம்! தவிர, உங்கள் தனித்திறமை, நடத்தை, ஆளுமை அனைத்தும் முக்கியம். மாலை இண்டர்வ்யூ நடக்கும்போது, உள்ளே நுழைந்தவுடன் பதற்றத்தில் குட்மார்னிங் சொல்லக்கூடாது. லைட்டான கலரில் உடை அணிவது நல்லது. தெரியாத விஷயங்களைப் பற்றிக் கேட்டால் 'தெரியவில்லை' என்று நேரடியாக ஒப்புக் கொள்வதுதான் புத்திசாலித்தனம்.

**ஷாலினி :** இன்றைய இளைஞர்களுக்கு தக்க வேலை கிடைத்தாலும், அதில் நீடிக்க வேண்டுமே என்ற கவலை வாட்டி வதைக்கிறதே?

**விஜயகுமார் :** அதில் நீடிக்க வேண்டுமென்றால் பணியில் முத்திரைப் பதிக்க வேண்டும். தனியாகவும் குழுக்களுடனும் பணிபுரியும் திறன், தலைமை மனப்பான்மை, நேர நிர்வாகம், மற்றவருடன் பழகும் திறன், குறிக்கோளைத் திட்டமிடல், க்ரியேட்டிவ் சிந்தனை, பகுத்தாயும் திறன் ஆகியவற்றை வளர்த்துக்கொண்டால் எந்த நிறுவனத்திலும் நீடித்து நிலைக்கலாம்.

**பாரத்குமார் :** சரி, எந்தெந்தத் துறைகளில் வேலைவாய்ப்பு பிரகாசமாக இருக்கிறது?

**விஜயகுமார் :** மக்கள் தொகை, இன்று நமது வளர்ச்சிக்கு உதவியாக இருக்கிறது. காரணம், பிறப்பு எண்ணிக்கை வெளிநாடுகளில் குறைவாகி விட்டதால், முதியோர்கள் அதிகமாகி விட்டார்கள். எனவே அறிவு சார்ந்த துறை (knowledge sector) நம் கைவசம்தான் இருக்கிறது. தவிர, மார்க்கெட்டிங் துறையில் நிறைய ஆட்கள் தேவைப்படுகிறார்கள். மனோதத்துவம் படித்தவர்களே கூட வேலைவாய்ப்பை உருவாக்க முடியும். இது தவிர விவசாயப் படிப்பு படித்தவர்கள், சிறிய டவுன்களில் வேளாண் பள்ளிகளை நடத்தலாம். இல்லையேல், இருக்கவே இருக்கிறது சுயதொழில். ஆக, தகுதி இருந்தால் கதவுகள் தானாகத் திறக்கும்!

தொகுப்பு : **ஸ்ரீநி**

படங்கள் : **ஸ்ரீஹரி**



● பாரத்குமார்

# தேவமருந்து 28

# மனமே

எங்காவது உச்சக்கட்ட சண்டை நடந்தாலும், அநீதிகள் நடந்தாலும் கேட்கப்படுகின்ற முதல் கேள்வி 'மனசு இருந்தா இப்படி நடக்குமா?' என்பதுதான். 'மனம்' என்றால் என்ன என்கிற கேள்வியும், ஆராய்ச்சியும் நீண்டுகொண்டே இருக்கிறது. தத்துவார்த்தமாக, மனதைக் குரங்கோடு ஒப்பிடுகிறோம். காரணம், மனம் இங்கும் அங்குமாக, குரங்கைப் போல் அலைந்து கொண்டும், தாவிக் கொண்டும் இருப்பதுதான். மேலும் சலம் என்கின்ற குணத்தைப் பெற்றிருப்பதால் மனத்தையும், குரங்கையும் ஒப்பிட்டுக் கூறுகிறார்கள். மனமானது, ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற மூன்று குணங்களால் ஆனது. உண்மை, நன்னடத்தை போன்றவை ஸத்வத்தைச் சார்ந்தவை. ஆபாசம், வேகம், உணர்ச்சி, செயல்பாடு, கோபம், தாபம், ரஜஸைச் சார்ந்தவை. அறியாமை-நல்லது, கெட்டது என்று பிரித்துப் பார்க்க இயலாமை, சோம்பல் - தமோ குணத்தைச் சார்ந்தவை.

ஆயுர்வேதத்தில் மனமும் உடலும் வேதனையின் இருப்பிடங்கள் என்று கூறப்படுகிறது. பழைய புத்தகங்களில் இருதயத்தை மனத்தின் இருப்பிடமாகக் குறிப்பிடுகிறார்கள். சுகத்தையும், துக்கத்தையும் அறிந்துகொள்ள மனமே உதவுகிறது என்று நாம் நம்புகிறோம். ஆச்சாரியர் பேலர், தலைக்கும் தாடைக்கும் இடையே மனம் இருக்கிறது என்கிறார். நவீன மருத்துவமோ Mind is the function of brain என்கிறது.

நாம் அனைவருமே அதீத பயத்தினாலோ, சோகத்தினாலோ, கோபத்தினாலோ, பாதிக்கப்படுகிறோம். இவை நம்மில் நீண்டு, நிலைத்து அன்றாட வாழ்க்கையை பாதித்து, நமக்கும் பிறருக்கும் துன்பத்தைத் தரும்போது மன நோய்களாக உருப்பெறுகின்றன.

**மன நோய்கள் :**

ஆயுர்வேதத்தில் உன்மாதம், கிரக ரோகங்கள் (கிரகத்தினால் பாதிக்கப்படும் நோய்கள்), அதத்வாபினிவேசம் (இல்லாதவற்றை இருப்பது போன்று பாவிக்கும் நோய்கள்) என மூன்று விதமான மன நோய்களைப் பற்றி கூறியுள்ளார்கள். மனத்தினுடைய புத்திக்குப் 'பிரஜ்ஞா' என்று பெயர். இந்த பிரஜ்ஞையானது, மூன்று தன்மைகளைக் கொண்டது. அதாவது தீ என்னும் அறிவு, த்ருதி என்னும் தைரியம் ஸ்ம்ருதி எனும் நினைவாற்றல். நினைவாற்றால் எல்லாருக்கும் மிக முக்கியமானது; மறதியும் முக்கியமானதுதான். நாம் சில விஷயங்களை மனத்தில் வைத்துக்கொள்ள விரும்புகிறோம். சில விஷயங்களை மறப்பதற்கு விரும்புகிறோம். அதிக பாதிப்பை ஏற்படுத்திய மரணங்கள், சோகங்கள், இழப்புகள் போன்றவற்றை யாரும் நினைவில் வைத்துக்கொள்ள விரும்புவதில்லை. இவ்வகை மறதி மனிதனுக்கு அவசியமாகிறது.

ஆனால், பேனாவை எங்கே வைத்தோம்; பணப்பையை எங்கே வைத்தோம் என்று எல்லா இடங்களிலும் தேடிக் கடைசியில் சட்டைப் பையிலேயே இருக்கும்! இது மனத்தின் ஒருமுகத் தன்மையை இழப்பதனால் ஏற்படுகிறது. இதுவே மிக அதிகமாகவும் தீவிரமாகவும் நிகழும்போது நோய் என்ற நிலையைத் தொடுகிறது. பலவிதமான மன நோய்கள் வருவதற்கு என்ன காரணம்?

பகவத் கீதையில் கிருஷ்ணர் உணவுக்கும் மனத்துக்கும் உள்ள தொடர்பைக் கூறுகிறார். இனிப்பு, நெய், பால், பால்படு பொருட்கள், கீரை சுத்தமான நீர் போன்றவை ஸத்வக் குணத்தை அதிகரிக்கச் செய்யும். காரம், புளி, உப்பு, எண்ணெய் பலகாரங்கள், அசைவ உணவுகள் போன்றவை உணர்ச்சியைத் தூண்டி மனத்தின் ரஜோ குணத்தை அதிகரிக்கின்றன. கெட்டுப் போனது, மலிந்தது, மீண்டும் மீண்டும் சூடாக்கப்பட்டது போன்

**பொருத்தமில்லாமல் இந்தப் படபடப்பு அடிக்கடி, மிகத் தீவிரமாக வருமானால், நம் அன்றாட வாழ்வும் ஆரோக்கியமும் பாதிக்கப்படும்.**



றவை தமோ குணத்தை அதிகரிக்கச் செய்கின்றன. பழக்கமற்ற உணவுகளைச் சாப்பிடுவதாலும் நோய்கள் வருகின்றன. வணங்கத்தக்கவர்களை வணங்காமல் இருப்பது, கவலை, விஷ நோய்கள், கிடைக்க வேண்டியது கிடைக்காமல் போதல், வாழ்வில் நிறை

# வாழ்வு!

**டாக்டர் எல். மஹாதேவன்**

விண்மை எதிர்பார்த்த செயல்கள் நடக்காதிருத்தல் போன்றவை, புத்தி, நினைவு, அறிவாற்றல் இவற்றைத் தாக்கி மனநோய்களை ஏற்படுத்துகின்றன.

பரபரப்பு நிறைந்த வாழ்க்கையில் சில பேர் எப்போதும் மிகவும் இறுக்கமாகவும், சூழ்நிலைக்குத் தேவையில்லாத அளவுக்குப் படபடப்புடனும் காணப்படுவார்கள்.

கடினமான சந்தர்ப்பங்களைச் சந்திக்க வேண்டிய சூழலில் மனப்பரபரப்பு ஏற்படுவது தவிர்க்க முடியாதது. நாம் ஒரு பாம்பைப் பார்த்தவுடன் பயப்படுவது இயற்கையானதே. அந்நேரத்தில் இருதயத்தில் இரத்த ஓட்டம் அதிகரித்து தசைகளுக்கு இரத்த ஓட்டம் அதிகரித்து நமக்குள் ஒரு வீரியம் கிடைக்கும். ஆனால் பொருத்தமில்லாமல் இந்தப் படபடப்பு, அடிக்கடி, மிகத் தீவிரமாக வருமானால், நம் அன்றாட வாழ்வும், ஆரோக்கியமும் பாதிக்கப்படும். இந்தக் கட்டத்தில் நோயாகவே கருத வேண்டும்.

ஆயுர்வேதத்தில் இது வாதத்தால் மனம் பாதிக்கப்பட்ட நிலைமை என்று கூறுகிறார்கள். நம்மில் நூற்றுக்குப் பதினைந்து பேருக்கு Anxiety எனும் இப்பரபரப்புக் காணப்படுகிறது.

**(தொடரும்)**

**தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி எண் 23**

குடும்ப உறவுகள் மேம்பட கையாள வேண்டிய ஒரு சிறந்த வழிமுறையை எழுதி அனுப்புங்கள். சிறந்தவை தேர்ந்தெடுக்கப்பட்டு முதல் பரிசாக தன்வந்தரி வெள்ளி டாலரும், இரண்டாம் பரிசாக டாக்டர் எல்.மஹாதேவனின் தேவமருந்து முதல் பாகமும் பெறும். ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

**கடைசி நாள் 7.5.2007**

# வளம் தரும் கோயில் 4





**மா**டு மனை
போனால் என்ன
மக்கள் சுற்றம்
போனால் என்ன
கோடிச் செம்பொன்
போனால் என்ன-
கிளியே
குறுநகை போதுமடி!
குமரன் குறுநகை
போதுமடி!

முருகனைக் குறித்து நாட்டுப்புற மெட்டில் அமைந்த பாடல் இது. 'வீடு, வாசல், மக்கள், சுற்றம், செல்வம் எது போனாலும் போகட்டும்; முருகனுடைய சிரிப்பு ஒன்று போதும் எனக்கு' என்று காதல் பாவத்தில் கொஞ்சிக் கும்மாளமிடுகிறது!

அதே முருகன்தான் சிறுவாபுரியில் இருந்துகொண்டு, ''அங்கே இங்கே சுற்றாமல் இங்கே வா! வந்தால் வீடு தருகிறேன், வாசல் தருகிறேன், மண வாழ்க்கை தருகிறேன்'' என்று உத்தரவாதப் பட்டியலை நீட்டிக் கொண்டு நிற்கிறான்! சிறுவாபுரி பாலசுப்ரமண்ய ஸ்வாமியிடம் வேண்டிக்கொண்டால் ஃப்ளாட் முதல் பிளாட் வரை, எல்ஐஜி. குடியிருப்பு முதல் லக்ஷுரி அபார்ட்மெண்ட் வரை... அவரவர் ஆவல் பூர்த்தியாகுமாம்! காதல் திருமணமோ மோதல் திருமணமோ - அது தடை நீங்கி விரைவிலேயே நடக்குமாம்! 'அதிசயம், ஆனால் உண்மை' என்று அடித்துச் சொல்கிறார்கள்.

சென்னை - கொல்கத்தா நெடுஞ்சாலையில், புழலேரி தாண்டிப் போய்க் கொண்டேயிருந்தால் ஒரு சுங்கச்சாவடி



# வள்ளி மணவாளன்; வீடு தரும் வேலன்!

சீதா ரவி

வரும். அங்கே செலுத்த வேண்டியதைச் செலுத்திவிட்டு இன்னும் சிறிது தூரம் போனால் இடப் பக்கத்தில் **'சிறுவாபுரி முருகன் கோயில்'** என்று அறிவிப்புப் பலகையும் அம்புக்குறியும் காணப்படும். வயல்வெளிகளிடையே வகிடெடுக்கும் அந்தக் கிளைச் சாலை, சிறுவாபுரி முருகன் கோயில் ராஜகோபுரம் வரை செல்கிறது. சென்னையிலிருந்து பெரிய பாளையத்துக்குச் செல்லும் பேருந்துகள் (எண் 547) சிறுவாபுரியில் நின்று செல்கின்றன.

ஆனால், கோயில் திறந்திருக்கும் நேரம் அறிந்து செல்வது நல்லது; இல்லையேல், அந்தச் சின்னஞ்சிறு ஊரில் காத்திருப்பதற்குக்கூட அதிக இடம் கிடையாது.

நாம் சென்றபோது பிற்பகல் சுமார் மூன்று மணி என்பதால், ஒன்றரை மணி நேரத்துக்கு மேல் காத்திருக்க வேண்டி வந்தது. "நடை திறக்காவிட்டாலும் பரவாயில்லை; கோபுர வாசலைச் சற்றுத் திறந்துவிடுங்கள், உள்ளே உட்கார்ந்து கொள்கிறோம்" என்று கோயிலுக்குப் பின்னால் இருக்கும் அலுவலகத்தில் சென்று கேட்டுக் கொள்ள, சுவாமி வரம் கொடுப்பதற்கு முன் சிப்பந்திகள் வரம் கொடுத்துக் கதவுகளைத் திறந்துவிட்டார்கள்.

உள்ளே அமர்ந்து இளைப்பாறிய வேளையில் 'சிலுசிலு'வென்ற மென்காற்று வீசியது. கோயிலின் பின்புறத்தில் அழகான பொய்கை இருக்கிறது. உள்ளே சிறிய, பசுமையான நந்தவனம் முன் மண்டபத்தையொட்டி நெடிதுயர்ந்த துவஜஸ்தம்பம். அதனடியில் 'திருவாளர் மயில்வாகனமும்' நம்மைப் போலவே நடை திறப்பதற்காகக் காத்திருக்கிறார். தூரத்திலிருந்து பார்க்கிறபோதே அந்த மயூரத்தின் அழகும் ஆவலும் நம்மை வசீகரிக்கின்றன. அருகில் சென்று பார்க்க, மழமழப்பான கரும்பச்சை நிறக் கல்லில் செதுக்கப்பட்ட சிற்பம் என்பது புலனாகிறது. இறகுகளின் மடிப்புகளும் தோகையின் தழைவும் வெகு கவனமாக வழங்கப்பட்டிருக்கின்றன. அழகனைச் சுமக்கும் வாகனம் என்றால் சும்மாவா, சொல்லுங்கள்!

**கா**த்திருக்கும் நேரத்தில் மண்டபச் சுவரில் பொறித்து வைக்கப்பட்டுள்ள செய்தியைப் படிக்கிறோம்:

லவ-குசர்கள், தங்கள் தந்தை என்று தெரியாமல் ராமனுடன் இங்கே போரிட்டிருக்கிறார்கள்! சிறுவர்கள் அம்பை எடுத்துப் போரிட்ட இடம் சிறுவரம்பேடு அல்லது சின்னம்பேடு. இதுவே சிறுவர் புரி என்றும் சிறுவாபுரி என்றும் அறியப்





படலாயிற்று.

இதைத் தவிர, இவ்வூர் முருகனின் அருளால் முருகம்மை என்ற பெண் ஆட்கொள்ளப்பட்ட கதையும் இருக்கிறது! எப்போதும் முருகனையே எண்ணி உருகிக் கொண்டிருந்த அம்மையின் கையை அவள் கணவன் கோபத்தில் (அவள் போக்கு பிடிக்காமல்தான்) வெட்டிவிட்டானாம்! அதை மீண்டும் பொருத்தும் அற்புதத்தை நிகழ்த்தியிருக்கிறான் முருகன்!

திருப்புகழ் கீதங்களைப் பரவலாக்கப் பாடுபட்ட வள்ளிமலை சுவாமிகள், இத்தலம் வீடு வேண்டி வருவோருக்கான பிரார்த்தனைத் தலம் என்று சொன்னதாகவும் ஒரு செய்தி இடம்பெற்றிருக்கிறது. இப்பிறப்பில் குடியிருக்க வீட்டையும் இறுதியில் முக்தி என்னும் நிரந்தர வீடுபேற்றையும் வழங்கும் கடவுள் குகன் என்பதாக ஆதிசங்கரர்கூட சுப்ரமண்ய புஜங்கத்தில் உறுதியாகச் சொல்லியிருக்கிறாரே!

அருணகிரிநாதருக்கு, மயில் மீது ஆடி வந்து முருகன் காட்சி தந்த தலம் இது என்று அறிகிறோம்.

'அடடா, அந்தக் காட்சிதான் எப்படிப்பட்டதாக இருந்திருக்கும்...? மயிலின் துள்ளலும் தாவலும் முருகனின் அலங்கார அசைவுகளும்தான் அருணகிரியாருடைய திருப்புகழின் விதவிதமான வியப்பூட்டும் சந்தங்களாக உருக் கொண்டனவோ...?' - நாம் சிந்தித்துக் கொண்டிருக்கையிலேயே குருக்கள் வந்து நிலைக்கதவைத் திறக்க, கூடியிருந்த சிறு பக்தர் கூட்டம், **"வெற்றி வேல் முருகனுக்கு, அரோகரா!"** என்று கூவியபடி உள்ளே நுழைகிறது.

சிறுவாபுரி பாலசுப்ரமண்யன் பேரழகனாகக் காட்சி தருகிறான். மல்லிகைக் காலம் என்பதால் எல்லா பக்தர்களும் மலர்ச் சரங்களைச் சமர்ப்பிக்கிறார்கள். அர்ச்சகர்கள் அவற்றைக் கவனமாக அவன் தோளிலும் கரங்களிலும் கிரீடத்தைச் சுற்றியும் சார்த்தி அலங்கரிக்கிறார்கள். நெஞ்சில் சார்த்திய நெடுவேலும் மேல் திருக்கரங்களில் ஜப மாலையும் கமண்டலமும் ஏந்தியிருக்கிறான். இடக் கீழ்க்கரம் ஒயிலாக இடையைப் பற்றியிருக்க, வலக்கரம் அருளும் கோலத்தில் அஞ்சல் சொல்கிறது!

இவனிடம் என்ன வேண்டிக்கொள்ள வந்தோம் என்றே மறந்து போய்விடும் - 'குறுநகை போதுமடி' கதைதான்!

இந்த முருகன் புதியவன். இவனுடைய சீனியர் இன்னும் உயரமாக, ஆஜானுபாகுவாக, இதே கோயிலின் பின்புறத்தில் 'ஆதிமூலவர்'



என்ற பெயருடன் இருக்கிறார். அந்தச் சிலை வடிவத்தில் சிறு பின்னம் ஏற்பட்டதால் புதியது செய்து வைத்திருக்கிறார்கள்.

அடுத்த அடுக்கில் நுழையும் முன், முருகனைப் பார்த்தபடி நிற்கும் அருணகிரிநாதர் நமக்கு முகமன் கூறுகிறார்: "நீங்கள் எங்கு வேண்டுமானாலும் போங்கள்; நான் இங்கேயே இவனைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்பதைப் போலிருக்கிறது அவரது தோரணை!



அடுத்த சந்நிதியில் அண்ணாமலையாரும் உண்ணாமுலை அம்மையும் பாலசுப்ரமண்யனை அடைந்த பெருமிதத்தில் ஒளி வீசுகிறார்கள். அவர்களுக்கு மத்தியில்... மயக்கும் அழகு படைத்த வார்ப்புச் சிலையாக கந்தனும் - வள்ளியும். மணக்கோலத்தில் இந்தக் காதல் தம்பதி நிற்பதைப் பார்த்தால், நமக்குக் காதல் மீதே காதல் வரும்!

திருப்புகழ் அன்பர்கள் இத்தலத்துக்குச் செய்தளித்த வார்ப்பு இந்த வள்ளிமணவாளப் பெருமாள் என்று அறிகிறோம்.

''வள்ளி பதம் பணியும் தணியா அதி மோக தயாபரன்'' என்று அருணகிரிநாதர் கந்தர் அனுபூதியில் பாடி வைத்திருக்கிறார். முதலில் வள்ளியின் காலைப் பிடித்துக் கெஞ்சி, இதோ, இப்போது கையைப் பிடித்து நிற்கும் முருகனிடத்திலும் அதே தணியா அதி மோகம்தான் ததும்புகிறது! குறமகளோ கன்னஞ்சிவக்க நாணத்துடன் நளினமாகக் கரம் நீட்டி, ஆவலுடன் கடைக்கண்ணால் நோக்கும் கோலத்தில் நிற்கிறாள். கேமராவும் சரி, பேனாவும் சரி இந்தக் கோலத்தை ஓரளவுதான் பதிவு செய்ய முடியும். வள்ளியும் முருகனும் பரிமாறிக்கொள்ளும் பார்வையின் பொருள் அந்தச் சந்நிதியில் நிறைந்து கிடக்கிறது. நீங்களே நேரில் சென்று பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள்.

> ●●
>
> வள்ளி கணவன் பேரை
> வழிப்போக்கர் சொன்னாலும்
> உள்ளம் குழையுதடி கிளியே
> ஊனும் உருகுதடி!
>
> ●●

அதிலும், வருகிற மே ஆறாம் தேதி அன்று போனால், வள்ளிக் கல்யாண மஹோத்சவத்தைப் பார்க்கலாம். அந்த உத்சவத்தில் கலந்துகொண்டு மாலை வாங்கிக்கொண்டால் ஆறுமுகன் அருளால் ஆறே மாதங்களில் திருமணம் நடக்கிறதாம்! ○

**தரிசன நேரம்:**

ஞாயிறு, கிருத்திகை: காலை 6.30 - பிற்பகல் 1.30; மாலை 4.00 - 7.30. பிற நாட்களில் காலை 8.30, நண்பகல் 12.00; மாலை 5.00 - 7.00

மே 6 அன்று சென்னையில் பல பாயின்டுகளிலிருந்து அதிகாலைப் பேருந்து வசதி உண்டு. அபிஷேகம் காலை 8.00 மணி. திருக்கல்யாணம் காலை 10.00 மணி.

தொலைபேசிகள்: 42035691, 24714767, 9444086899

ஆனந்தன் குருக்கள்: 9444280595

# நீங்கள் கேட்டவை

**1 ● ஆர்.ரங்கநாதன், சென்னை - 17**

***? பாபுபாய் கடாரா விவகாரம்?***

! அவர் மட்டுமின்றி, வேறு பல எம்.பி.க்களும் இதைப்போன்ற கேவலமான நடத்தை உள்ளவர்களே என்பது ஏற்கெனவே பல முறை நிரூபணமாகியுள்ளது. வேட்பாளர்களைத் தேர்வு செய்யும்போது, பல்வேறு கட்சித் தலைவர்களும் விழிப்புடன் இருந்து, வெற்றி வாய்ப்புகளை மட்டும் பாராமல், தூய்மைக்கு முதலிடம் தந்தால்தான் நாடு உருப்படும்.

**2 ● என்.கௌரி, கோவை**

***? போலீஸ் வேலை தேர்வுக்காக எட்டு மாத கர்ப்பிணிப் பெண் ஓட்டப்பந்தயத்தில் கலந்துகொண்டது எதை உணர்த்துகிறது?***

! 1) எப்பாடு பட்டாவது வேலை தேடிக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் அவரைப் போல பல பெண்கள் இருக்கிறார்கள் என்பதை 2) குறிப்பிட்ட பெண்மணியின் துணிச்சலை 3) தேர்வு நடத்தியவர்கள் மனிதாபிமான அடிப்படையில் ஒரு விதிவிலக்கை அளிக்கத் தயாராக இல்லை என்பதை.

**3 ● லெ.நா.சிவகுமார், சென்னை**

***? பண வீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்காகவே வட்டி விகிதங்கள் உயர்த்தப் பட்டதாகச் சொல்கிறாரே ப.சிதம்பரம்?***

! பண வீக்கத்தை (விலைவாசி உயர்வை) சகித்துக் கொள்ளுங்கள் என்று டிராக் மாறிவிட்டாரே! இதற்கு ஒரு நிதியமைச்சர் தேவையா?

**4 ● அனன்யா, பெங்களூர் - 40**

***? கேரளாவில், மதம் பிடித்த யானை ஒன்று, பாகனை துவம்ஸம் செய்த கோரத்தை சிடியில் பதிவு செய்து விற்று, காசு பார்த்த செய்தியைப் படித்தேன். மனிதம் எங்கே போய்க்கொண்டிருக்கிறது?***

! அதனைக் காலின் கீழ் போட்டு துவம்ஸம் பண்ணிவிட்டோம்.

**5 ● அ.சுகுமார், காட்பாடி**

***? ஹாலிவுட் நடிகர் ரிச்சர்ட் ஜெர் தம்மை முத்தமிட்டது சாதாரண விஷயம் என்கிறாரே ஷில்பா ஷெட்டி?***

! உண்மைதான். மேலை நாகரிக வழக்கம் அது. அந்த நாகரிகத்தில் ஊறிய ரிச்சர்ட் அப்படி நடந்துகொண்டதில் அதிசயமில்லை. அந்தக் காட்சியை டி.வி.யில் பார்க்கும்போது, ஷில்பா தர்மசங்கடத்துடன் நெளிந்து அதைத் தவிர்க்கவே முயன்றார் என்று தெரிகிறது. இந்த நிகழ்வைப் பெரிதுபடுத்தாமல் விட்டுவிடுவதே நல்லது. எதிர்காலத்தில் இதுபோன்ற எய்ட்ஸ் விழிப்புணர்வு கூட்டம் நடத்துவோர் எச்சரிக்கையாக செயல்படட்டும்.



● மறக்க வேண்டிய முத்தம்!



• கடனும் கடிதமும்!



• லேட்டான அறிவிப்பு!

6 • வீ.சௌந்தர்ராஜன், நேதாஜி

? 'தொழில் படிப்புக்காக வங்கிகள் கல்விக் கடன் தராவிட்டால், மாண வர்கள் எனக்குக் கடிதம் எழுதுங்கள்' என்று மத்திய நிதியமைச்சர் சொல்கிறாரே?

! மிகத் தவறான முன்னுதாரணம். நிதி அமைச்சர், அரசுடைமை வங்கிகளுக்கு அரசின் கொள்கைகளை விளக்கி, அவற்றுக்கு அனு சரணையாக நடக்கும்படி கோரலாமே தவிர, அவற்றின் தினசரி நடவடிக்கைகளில் தலை யிடக் கூடாது.

7 • அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21

? 'பா.ஜ.க. பிரசார சி.டி. மதவாத நோக்கு கொண்டது அல்ல' என்று வெங்கையா நாயுடு கூறுகிறாரே?

! இந்த விஷயத்தில் அவர் வெங்காய நாயுடு!

8 • ஜெ.ஜெயராணி, மதுரை - 4

? 'உலக வரலாற்றைப் படிக்காதவர்கள், இந்திய வரலாற்றின் சமூகப் போராட்டத்தைப் படிக்காதவர்கள் இன்றைய நீதிபதிகளாக இருக் கின்றனர்' என்று நல்லகண்ணு கூறியிருப்ப தைப் பற்றி...?

! இதைவிடவும் கேவலமாக நீதிபதிகளை இழிவாகப் பேசியிருக்கிறார் கருணாநிதி. 'நூறு கோடி மக்களின் எதிர்காலத்தை இரண்டு பேர் நிர்ணயிப்பதா?' என்று கேட்டிருக்கிறார் - இது அபத்தம்! அம்பேத்கார் உள்ளிட்ட மக்கள் பிரதி நிதிகளைக் கொண்ட அரசியல் நிர்ணய சபை யில் உருவாக்கப்பட்ட அரசியல் சாசனம்தான் எதையும் நிர்ணயிக்கிறது. இன் றைய அரசியல்வாதிகள் அதைச் சிதைக்கிறார்கள்.



• வீண் விமர்சனம்!

9 • பாபு, திருச்சி - 4

? ஆதிதிராவிட மக்களுக்குத் தனியாக பட்ஜெட் போட வேண்டுமென்று காங்கிரஸ் உறுப் பினர் யசோதா பேரவையில் கோரிக்கை வைத்துள்ளாரே...?

! ஆதிதிராவிடர் நலனுக்கு ஊறு விளைவிக்கக்கூடிய கோரிக்கை

ரூ.100 பரிசு பெறுபவர் :
**இரா.சக்கரபாணி,**
38, கன்னிகா இல்லம்,
சந்தனமாதா கோயில் தெரு,
கோ.புதூர்,
மதுரை - 625 007.

ரூ.50 பரிசு பெறுபவர் :
**பூங்கா பெரியசாமி,**
குணசேகரன்,
தவுத்தாய்க்குளம்,
அரியலூர் - 621 704.



• ஓரங்கட்டும் யோசனை!

• பலரில் ஒருவர்!

இதைக் காட்டிலும் வேறொன்று இருக்க முடியாது. யசோதா யோசிக்காமல் பேசியிருக்கிறார். 'இவ்வளவு தான் உங்களுக்கு' என்று அவர்களை ஓரங்கட்டியதாகி விடும். அதில் எவ்வளவு அவர்களை ஒழுங்காகச் சென்றடையும்?

**10 • 'பூங்கா' பெரியசாமி, அரியலூர் ★**

***? வரதட்சணையை எதிர்க்காத பெண்கள் எவ்வளவு படித்திருந்தாலும் அது பயனற்றது என்கிறாரே கனிமொழி?***

! இது காய்மொழி! வரதட்சணையை எதிர்க்கும் அளவுக்குத் தன்னம்பிக்கையை ஊட்டாத கல்வி பயனற்றது என்பது கனிமொழி!

**11 • பா.அச்சுதன், வயலூர்**

***? 'தேசிய மனநல மருத்துவத் திட்டத்தை மறுசீரமைக்க நடவடிக்கை எடுக்கப்படும்' என்று மத்திய சுகாதாரத் துறை அமைச்சர் அன்புமணி தெரிவித்துள்ளாரே...***

! அறிவிப்பை வரவேற்கிறோம். எப்போதோ செய்திருக்க வேண்டியது; இப்போதாவது வேளை வந்து சேரானால் சரி.

**12 • இரா.சக்கரபாணி, மதுரை - 7 ❒**

***? அமெரிக்க வர்ஜீனியா பல்கலைக்கழகத்தில் நடந்த துப்பாக்கிச் சூட்டில் 32 பேர் கொல்லப்பட்டதற்கு யார் பொறுப்பு...?***

! பல்கலைக்கழக நிர்வாகத்தின் அலட்சியப் போக்குதான். மனநோயாளி என்பது ஆராயப்படாமல் பல்கலைக்கழகத்தில் இடமளித்தது முதல் தவறு. முதல் துப்பாக்கிச் சூட்டில் இருவர் இறந்த பிறகு உடனே அதிரடி பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்க வேண்டும். தவறியதால், தயங்கி - தாமதித்ததால், இரண்டாவது சுற்று ஷூட்டிங்; பலத்த உயிர்ச்சேதம்.

**13 • எம்.பாஸ்கர், திண்டுக்கல்**

***? "கோயிலுக்குச் செல்லாமல் வந்த வேலையைப் பார்த்திருந்தால், வி.ஏ.ஓ.க்கள் லெவல் கிராஸிங்கில் சிக்கி உயிர் நீத்ததைத் தவிர்த்திருக்கலாம். அதற்காக கோயில் கடவுளிடம் நஷ்டஈடு தருமாறு கேட்க மாட்டேன்" என்று முதல்வர் கருணாநிதி கூறியுள்ளதைப் பற்றி?***

! கருணாநிதியைக் காண வரும்போது விபத்துக்குள்ளாகி செத்து மடிந்தவர்கள் உண்டு. நஷ்டஈடு, கடவுள்தான் கட்சி மூலமாகவோ, அரசு கஜானாவிலிருந்தோ கொடுக்கிறார். கருணாநிதியைக் கேட்பதில்லை.

**14 • கே.கஸ்தூரி கதிர்வேல், வேலூர்**

***? "காந்திஜி ஃபாதர் ஆஃப் தி நேஷன் என்றால், கருணாநிதி ஃபாதர் ஆஃப் நேஷன் ஆவார்" என்று காங்கிரஸ் எம்.எல்.ஏ. யசோதா, சட்டசபையில் புகழ்ந்து பேசியுள்ளாரே?***

! *சரியான கிண்டல்! ஜோக் ஆஃப் தி சீஸன்!*

**வாசக தராசுகளே வாக்களியுங்கள்!**

இந்த வாரம் உங்கள் வோட்டு எந்த பதிலுக்கு...? அஞ்சலட்டையில் கேள்வி எண்ணைக் குறிப்பிட்டு வாக்களியுங்கள். 'வாசக தராசு 6.5.2007' என்று முகவரிப் பகுதியில் குறிப்பிட்டு, 11.5.2007க்கு முன்னதாக அனுப்பி வையுங்கள். மிக அதிகமான வாக்குகள் பெறும் கேள்வியைத் தேர்வு செய்த யாரேனும் ஒருவருக்குக் குலுக்கல் முறையில் பரிசு ரூ.100/-

அப்புறம்... இது பரிசு நேரம். கல்கி 15.4.2007 இதழில் வெளியான தராசு பதில்களில் மிகச் சிறந்த பதிலாக வாசகர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டது பதில் எண் 5. குலுக்கல் முறையில் ரூ.100 பரிசு பெறும் வாசகி **ரூபாவதி சௌந்தர்ராஜன்,** அரியலூர். வாழ்த்துகள்.

# போட்டி முடிவு

கல்கி 4.2.2007 இதழில் வெளியான 'பரீட்சை டிப்ஸ்' போட்டியில் பங்கேற்று, சிறந்த டிப்ஸ் எழுதி தலா ரூ.250/- பரிசு பெறும் எட்டு வாசகர்கள்...

★ இரவு உறங்கச் செல்லும்போது 'இன்று படித்தது' என்று படித்ததை ஒருமுறை நினைவுப்படுத்தி உறங்கச் செல்லவும். காலையில் எழுந்து பாருங்கள், நேற்று படித்தவை சல்யூட் அடித்து உங்கள் முன்னால் வந்து நிற்கும்.

- ஆர். பிரேமா,
பெங்களூரு - 76

★ எந்தவிதக் கவலையுமின்றி மனதை ரிலாக்ஸாக வைத்துக் கொள்ள வேண்டும். கூடவே கண்ட சிந்தனையை எல்லாம் விட்டொழிக்க வேண்டும்.

- நளினி ஸ்ரீதர்,
மதுரை

★ டி.வி. பார்த்துக்கொண்டோ, எஃப்.எம்.கேட்டுக்கொண்டோ படிப்பது கவனச் சிதறலை உண்டாக்கும். குரூப் ஸ்டடிக்கும் தடா போட வேண்டும்.

- எஸ்.கோபிநாதன்,
தஞ்சை

★ பரீட்சை தொடங்கும்போது மனமுருகி ஒருமுறை பிரார்த்தித்த பின் எழுத ஆரம்பிக்கவும். கூடவே நமக்கு வாழ்வளித்த தாய், தந்தையையும்...

- எஸ்.மணிமொழி, ஆரணி

★ படிக்கும்போது தூக்கம் வந்தால், சமாளித்து விழித்துப் படிக்க வேண்டாம். தூங்கிவிட்டுப் பிறகு எழுந்து படிக்கலாம்; புத்துணர்ச்சியாய் உணரலாம்.

- அ.சுகுமார், காட்டுக்கானூர்

★ மனப்பாடம் செய்வதைவிட புரிந்து படிப்பது எப்போதுமே நலம் பயக்கும்.

- எம்.சம்பத்,
வேலாயுதம்பாளையம்

★ பரீட்சை காலங்களில் செரிக்கும்படியான, எந்தவிதச் சிறு பாதிப்புமற்ற உணவுகளையே உண்ண வேண்டும்.

- எம்.ஜி.பரத்,
திண்டுக்கல்

★ வினாத்தாளை கையில் வாங்கியதும் முழுவதும் ஒரு முறை படித்துவிட்டுத் தெரிந்த கேள்விகளுக்கு முதலில் பதில் எழுதவும். தெரியாதவற்றுக்குப் பிறகு யோசித்து எழுதலாம்.

- ராஜப்பன் அசோக்குமார்,
அறந்தாங்கி



"சந்திரமுகி, அந்நியன் மாதிரிப் படங்களைப் பார்த்துவிட்டுப் பலரும் தவறான அனுமானங்களை வளர்த்துக் கொள்கிறார்கள். ஒரு டாக்டரேகூட போன மாதம் என்னிடம் வந்து 'மனோவசிய முறையில் என்னைக் குணப்படுத்துங்கள்' என்றார்! மெஸ்மரிஸம், ஹிப்னாட்டிஸம் என்பதெல்லாம் இப்போது மனவியல் மருத்துவத்தில் கிடையாது. அவற்றை 'மனவியல் மருத்துவ வரலாறு' என்பதில்தான் காண முடியும். அத்தகைய சிகிச்சைகள் இப்போது அறிவியலாகக் கருதப்படுவதில்லை'' என்கிறார் வேளச்சேரியில் 'மைண்ட் கேர்' கிளினிக்கை நடத்தி வரும் மனவியல் மருத்துவர் ஆனந்தன்.

"மீடியாவின் மீதும் பல டாக்டர்களின் மீதும் எனக்கு நிறைய வருத்தம் உண்டு. மருத்துவத் துறையில் (அதாவது போலி மருத்துவத் துறையில்) விளம்பரங்கள் உருவாக்கப்பட்டு, மக்கள் மீது திணிக்கப்படுகின்றன. இந்த விளம்பரங்களைப் பார்த்துவிட்டு எந்தச் சிக்கலும் இல்லாத பலரும் தங்களுக்கு ஏதோ உடல் கோளாறு இருப்பதாக நம்பிப் போலிகளிடம் சிகிச்சைக்குச் செல்கிறார்கள். இவற்றில் 'செக்ஷுவல் ஆன்க்ஸைட்டி டிஸ்ஆர்டர்' மிகப் பரவலான ஒன்று. அதுவும் வீட்டில் திருமணத்தைப் பற்றிப் பேச்செடுத்தால் முதலில் மனவியல் மருத்துவர்களை நாடுகிறார்கள். அந்த அளவு இவர்கள் அந்த விளம்பரங்களால் பய முறுத்தப்பட்டிருக்கிறார்கள். இது 'Media Induced Anxiety'. அதுவும் பல சேனல்களில் இரவு பன்னிரண்டுக்குப் பெரும்பாலும் இப்படிப்பட்ட விளம்பரங்கள்தான்.

அண்ணா பல்கலைக்கழகத்தில் படித்துக்கொண்டிருந்த மாணவன் ஒருவனைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். ப்ளஸ் டூவில் மிக அதிக மதிப்பெண்கள் பெற்றுப் பதக்கம் வாங்கியவன் அவன். ஒருநாள் இரவு அவனுக்கு இதயப் படபடப்பு ஏற்பட்டுத் துடித்தான். சக மாணவர்கள் அவனை மருத்துவமனையில் சேர்த்தார்கள். ஈ.சி.ஜி. போன்ற பல சோதனைகள் செய்யப்பட்டன. 'எந்தவித இதயக் கோளாறும் இல்லை. Panic attackதான். மனவியல் மருத்துவரிடம் ஆலோசனை பெறலாம்' என்றார் அந்த டாக்டர். ஆனால், வேறு பல டாக்டர்களைச் சந்தித்துவிட்டு, கையில் சூடம் ஏற்றிக்கொண்டால் பயம் போய்விடும் என்பது போன்ற சிகிச்சைகள் உட்பட பலவற்றைச் செய்துகொண்டுவிட்டு,ஆறு மாதங்களுக்குப்

**"சந்திரமுகி, அந்நியன் மாதிரிப் படங்களைப் பார்த்துவிட்டுப் பலரும் தவறான அனுமானங்களை வளர்த்துக் கொள்கிறார்கள்"**

# நோயில்லா வலி!

பிறகு என்னிடம் வந்தான் - அதாவது அவனை அழைத்துக் கொண்டு வந்தனர் அவனது பெற்றோர். இந்த ஆறு மாதங்களுக்குள் எக்கோ, டாப்ளர் என்று பலவித சோதனைகளைச் செய்தாகிவிட்டது!

அவனிடம் தனியே பேசிப் பார்த்ததில் அவனுக்கு இருந்தது sexual anxiety disorder என்பது மட்டுமே என்று தெரிய வந்தது. தனது கற்பனை பயங்களால் இல்லாத உடல் உபாதையை நீண்ட காலத்துக்குத் தொடர விட்டுவிட்டான் அந்த மாணவன்!

**மீ**டியா மூலம் பெற்ற அரைகுறை அறிவு காரணமாக மிரண்டு போய் நோய்களைக் கற்பித்துக் கொள்வது ஒரு விதம் என்றால், நிறைய மருத்துவத் தகவல்களைத் தெரிந்து வைத்துக்கொண்டு 'சொமடைஸேஷன்' என்கிற ஒருவித உபாதைக்கு உள்ளாவது இன்னொரு வகை.

இந்நோயாளிகள் பல்வேறு விதமான வலிகள் இருப்பதாகப் புகார் செய்வார்கள். எங்களிடம் வருவதற்கு முன் பத்து டாக்டர்களிடம் ஆலோசித்திருப்பார்கள். அவர்களில் சிறப்பு மருத்துவர்களும் அடக்கம். முக்கியமாக முப்பதிலிருந்து நாற்பது வயதில்தான் இந்த நிலை அதிகம் ஏற்படுகிறது. பெண்களாக இருந்தால் மெனோபாஸ் சமயத்தில் இந்த நிலை ஏற்படலாம்.

வலிக்குக் காரணம் நோய் என்றால் தானே குணப்படுத்த முடியும்? உடலில் ஏற்படும் இரசாயன மாறுதல்களால் இது ஏற்படுகிறது. பெரும்பாலும் செரொடோனின் என்ற இரசாயனப் பொருள் குறைவாகச் சுரந்தால் இப்படி மனச் சோர்வு உண்டாகி, அதன் காரணமாக உடலின் சில பகுதிகளில் வலி இருப்பதாகத் தோன்றலாம்.




முதலில் இந்த நிலையை ஏற்றுக் கொள்ளச் செய்வதுதான் முக்கியம். அதுதான் சவாலான பகுதியும்கூட.

ஆரம்பத்தில் "ஆமாம், உங்களுக்கு வலி இருக்கிறது" என்பதுபோல் கூறித்தான் அவர்களது நம்பிக்கையைப் பெற வேண்டும். 'ஆறு மாதங்களுக்கு நான் சொல்வதையெல்லாம் கேட்க வேண்டும், டாக்டர்களை மாற்றிக்கொண்டே இருக்கக் கூடாது. சொன்ன தேதிக்குத்தான் சிகிச்சைக்கு வர வேண்டுமே தவிர, முன்னதாக வரக்கூடாது...' இப்படிப் பல நிபந்தனைகளை விதித்துவிட்டு, சிகிச்சையைத் தொடங்க வேண்டும் (இந்த நிபந்தனைகளேகூட ஒருவித சிகிச்சைதான்). இந்த சொமடைஸேஷன் நிலை ஏற்படுவதில் பரம்பரைக்கு முக்கியப் பங்கு உண்டு" என்ற டாக்டர் ஆனந்தனிடம், 'அப்படியானால், இந்த நோயாளிகள் மனநல மருத்துவரிடம் செல்ல வேண்டுமா?' என்று கேட்டோம்.

"மனவியல் மருத்துவர்கூட இதற்குத் தேவையில்லை. பொது வைத்தியரே போதும். ஒரு டாக்டர் பரிசோதித்துவிட்டு, 'நீங்கள் நினைப்பதுபோல உங்கள் உடலில் கோளாறு இல்லை' என்று கூறுகிறபோது, அதை நம்ப வேண்டும். மாறாக அடுத்த மருத்துவர், வேறொரு மருத்துவமனை, இன்னும் ஒரு சோதனைச் சாலை என்று விரிவுபடுத்திக் கொண்டு போகக்கூடாது. அவ்வாறு ஒரு நோயாளி போக ஆரம்பிக்கிற நிலையில் மனநல மருத்துவம் குறித்து யோசிக்க வேண்டும்" என்கிறார் டாக்டர் ஆனந்தன்.

**- ஜி.எஸ்.எஸ்.**

# உங்கள் ஊரில் கல்கி

அன்பு வாசகர்களே!

அமரர் கல்கி அவர்களால் தோற்றுவிக்கப்பட்டு இன்றும் உங்கள் கரங்களில் தவழ்ந்து கொண்டிருக்கும் கல்கி வார இதழின் எக்கால நோக்கமும் தேச நலன்தான்.

நடுநிலையான தலையங்கம், அரசியல் / சமூக அக்கறையுடன் கூடிய கவர் ஸ்டோரி, உயர்நோக்கு கொண்ட சிறுகதைகள், குடும்பத்துடன் ஜாலியாக அமர்ந்து படிக்கக்கூடிய சினிமா... என்று பல்சுவை செய்திகளுடன் கல்கி வலம் வருகிறது.

கல்கி நிறுவனத்திலிருந்து மதிப்புமிக்க வாசகர்களாகிய உங்களைச் சந்திக்க உங்கள் ஊருக்கே வருகிறது கல்கி ஆசிரியர் குழு. இந்தச் சந்திப்பில் நீங்கள் உங்கள் குடும்பத்தோடு அவசியம் கலந்துகொண்டு, 'கல்கி' வார இதழைப் பற்றிய உங்களுடைய மேலான யோசனைகளையும் கருத்துகளையும் பரிமாறி, ஆக்கபூர்வமான யோசனைகளின் மூலம் கல்கி இதழை மேலும் மிளிரச் செய்ய உதவ வேண்டுகிறோம்.

இதயத்தை இதமாக்கும் 'கலகல' நிகழ்ச்சிகளும், இன்ப அதிர்ச்சியூட்டும் பரிசுப் போட்டிகளும் உண்டு. உங்கள் ஊருக்கு நாங்கள் வரும் தேதியை இன்றே உங்கள் நாட்குறிப்பில் குறித்து வைத்துக் கொள்ளுங்களேன்!

- ஆசிரியர் குழு



கல்கி
நிறுவன வெளியீடு
தரம் நிரந்தரம்

## திருநெல்வேலி

இடம் : ஹோட்டல் ஆரியாஸ், மதுரை ரோடு

தேதி : 12.05.2007

நேரம் : மாலை 4.30 மணி

## மதுரை

இடம் : ஹோட்டல் பிரேம் நிவாஸ், 102, மேலப் பெருமாள் மேஸ்திரி வீதி, பழைய தங்கம் தியேட்டர் அருகில்

தேதி : 13.05.2007

நேரம் : மாலை 4.30 மணி

விரைவில் மற்ற ஊர்களிலும்...

## திண்டுக்கல்

இடம் : வி.ஜி.எஸ். மீட்டிங் ஹால், பேருந்து நிலையம் அருகில்

தேதி : 14.05.2007 நேரம் : மாலை 4.30 மணி



உள்ளே...

# கல்கி




குடும்பத்துடன் படிக்க...

6. 5. 2007 இணைப்பு

## 3 யாமறிந்த மருத்துவத்திலே...





## 15 அன்பு... அக்கறை...

## 10 "மானிட்டரில் எண்கள் இல்லை!"





நுழைவாயில்...

# ஒற்றை நட்சத்திரம்!

இந்தியன் செல் தெரபி இன்ஸ்டிட்யூட் என்கிற மருத்துவக் கல்வி நிறுவனம், மதுரை - நாகமலையில் இயங்கி வருகிறது. அம்மா கல்வி அறக்கட்டளை சார்பாக இதனை நிறுவி இயக்கி வருபவர் லயன் டாக்டர் ஜி.மணி. சென்னை பல்கலைக்கழகத்தில் முதுகலை சமூக உளவியல் பயின்றவர். பி.எம்.தேவர் கல்லூரியில் இருபத்தாறு வருடங்கள் பணியாற்றியவர். சமூக உளவியல் துறையில் பேராசிரியராகவும், துறைத் தலைவராகவும் தொடர்ந்து இயங்கியவர். 'சென்னை மாநகரின் சேரி வாழ்ப் பெண்களின் பிரசவத்துக்கு முன்னும் - பின்னும்' என்கிற யதார்த்தமிகு தலைப்பில் கள ஆய்வு செய்து ஆய்வுக் கட்டுரைகளைச் சமர்ப்பித்தவர். சமூக உளவியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர். சைக்கோ தெரபி சிகிச்சை மற்றும் பயிற்சி மூலமாக, தனித்திறனுக்கு ஆட்பட்டிருந்தவர்களை இயல்புத் திறனுக்கு இடப் பெயர்ச்சி செய்தவர். மாற்று மருத்துவத்தில் எம்.டி. தேர்ச்சி பெற்றவர்.

"இந்த மனித சமூகத்துக்கு ஏதாவது செய்ய வேண்டும். நோயற்ற வாழ்வுக்கு செல் தெரபியே சிறந்த வழிகாட்டி என உணர்ந்து கொண்டவர். அதன் பயனாக உருவானதே 'இந்தியன் செல் தெரபி இன்ஸ்டிட்யூட்'. இது 2003ல் துவங்கப்பட்டது.

இது போன்ற செல் தெரபி குறித்தான மருத்துவக் கல்வி நிலையங்கள் உலகில் வேறெங்கும் இருக்கின்றனவா? Celltheraphy.com வலைத் தளத்தின் விரிந்த பரப்பின் உள்ளே சென்று தேடிப் பார்க்கையில் உலகிலேயே செல் தெரபி இன்ஸ்டிட்யூட்டாக இது ஒன்று மட்டுமே ஒற்றை நட்சத்திரமாக மின்னிக் கொண்டிருக்கிறது. ○

## ஸ்ரீ அன்னையின் ஆசி..

அம்மா கல்வி அறக்கட்டளை 2003ல் துவங்கப்பட்டது. அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர் டாக்டர் ஜி.மணிக்கு, புதுவை ஸ்ரீ அரவிந்தர் ஸ்ரீ அன்னை மீது அளவிலா பக்தி. ஸ்ரீ அரவிந்தர் ஸ்ரீ அன்னை பாத மலர்களினை மானசீகமாகத் தொட்டு வணங்கித் துவங்கப்பட்டதே 'அம்மா கல்வி அறக்கட்டளை!'



நேர்காணல்...

# யாமறிந்த மருத்துவத்திலே...

**இந்தியன் செல் தெரபி இன்ஸ்டிட்யூட் தோன்றியது எப்படி? அதென்ன செல் தெரபி? நம்மோடு பகிர்ந்துக் கொள்கிறார் டாக்டர் ஜி.மணி.**

**கல்கி:** 'இந்தியன் செல் தெரபி இன்ஸ்டிட்யூட்' உங்களுக்குள் எவ்விதம் உருவானது?

**டாக்டர் ஜி.மணி:** 'கருத்தால் உணர்ந்து காளானை உண்பர்; காலனையும் வென்றார் காணீர்!' என்பது நம் தமிழ் நிகண்டுகளில் காணப்படும் நிருபண வரிகள். ரிஷி காளான் என்பதே செல் தெரபி கண்டு பிடிப்பதற்கான காரணம். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய மருத்துவ முறை இது. இடையில் சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் உருவான குறிப்பிட்ட மருத்துவ முறை மட்டுமே இன்று இந்த மனித குலத்தைப் பெரிதும் வியாபித்திருக்கிறது. மக்களை வியாதிகளிலிருந்து முழுமையாகக்

Ln. Dr. G. Mani



காப்பாற்றி, நோயற்ற மனிதர்களாக அவர்கள் உலகில் உலா வர வேண்டும் என்கிற உயரிய நோக்கில் எனக்குள் உருவானது 'இந்தியன் செல் தெரபி இன்ஸ்டிட்யூட்!'

**கல்கி:** இந்த இன்ஸ்டிட்யூட்டின் பணிகள் என்னென்ன?

**டாக்டர் ஜி.மணி:** இந்தக் கல்வி நிறுவனம் மாற்று மருத்துவத்தில் எம்.டி. பட்டமும், ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்களுக்கு பிஹெச்.டி. பட்டமும் பெற்றுத் தருகிறது. கல்கத்தாவில் இயங்கி வரும் 'இந்தியன் போர்டு ஆஃப் ஆல்டர்நேடிவ் மெடிசின்ஸ்' என்கிற அமைப்பின் அங்கிகாரம் பெற்று, செயல்பட்டு வருகிறது எங்கள் நிறுவனம். நேரடியாகவும், தொலைதூரக் கல்வி வாயிலாகவும் பயின்று எம்.டி.



• சிகிச்சைக்கு வந்தவர்கள்...

(ஏ.எம்.) பட்டம் பெறலாம். அவ்வாறு பட்டம் பெற்றவர்களுக்கு ஆர்.எம்.பி. (Registered Medical Practitioner) சான்றிதழும் இணைத்து வழங்கப்படுகிறது. பயிற்சிக்குப் பின்னர் அவர்கள் தனியாக கிளினிக் துவங்கி மருத்துவப் பணியினைத் தொடரலாம். செல் தெரபி எனும் மாற்று மருத்துவத்தின் மூலம் மருத்துவர்களை உருவாக்கி உலகுக்கு அளிப்பதே இந்த இன்ஸ்டிட்யூட்டின் முக்கியப் பணிகளில் ஒன்றாகும். இதன் முதல் வகுப்பு பெங்களூரில் நடத்தப்பட்டது. அதற்கு பெங்களூரைச் சேர்ந்த டாக்டர் எம்.கோபாலகிருஷ்ணன் ஒருங்கிணைப்பாளராகவும், பேராசிரியராகவும் இருந்து தொடர்ந்து செயல்பட்டு வருகிறார்.

**கல்கி:** கடந்த மூன்றாண்டுகளில் சாதித்துள்ளவை...

**டாக்டர் ஜி.மணி:** தமிழகம் மட்டுமின்றி பிற மாநிலங்களில் இருந்தும் இங்கு வந்து பயின்று தேர்ச்சி பெற்றுச் செல்கின்றனர். வெளிநாடுகளிலிருந்தும் இங்கு

**Deal with the Cause not the Symptoms**

எல்லா மருத்துவத் துறைகளிலும் எந்த நோய்க்கான அறிகுறிகள் தென்படுகிறதோ, அதன் அறிகுறிகளுக்கு மட்டுமே வைத்தியம் செய்யப்படுகிறது. செல் தெரபியில் மட்டுமே அந்த நோயின் அறிகுறிகளுக்கான மூலக் காரணங்களைக் கண்டறிந்து அதனால் பாதிக்கப்பட்ட செல்கள் சீர் செய்யப்படுகிறது.





பல ஆண்டுகளாக ஆங்கில மருத்துவம் பார்த்து வந்துள்ள மருத்துவர்களில் ஒரு சிலர், எங்களிடம் வந்து செல் தெரபி பயின்று சென்றுள்ளனர். அவர்கள் இன்றைக்கு முழு நேர செல் தெரபி மருத்துவர்களாகச் செயல்பட்டு வருகின்றனர்.

**கல்கி:** அப்படி என்னதான் இருக்கிறது - இந்த செல் தெரபி மருத்துவத்தில்...?

**டாக்டர் ஜி.மணி:** அப்படிக் கேளுங்கள். மனிதனை சிறு சிறு அங்கங்களாகக் கூறு போட்டு, அவற்றுக்கெல்லாம் தனித்தனி நிபுணர்களை உருவாக்கி வைத்துள்ளது, இன்றைய மருத்துவ உலகம். இன்றைய மருத்துவத்தில் மனிதனின் எந்தவொரு நோயினையும் முழுமையாகக் குணப்படுத்தி விட்டதாகக் கூறவே முடியாது. மாறாக, அக்குறிப்பிட்ட நோய்களின் அறிகுறிகளுக்கு (symptoms) மட்டுமே மருத்துவம் பார்க்கப்படுகிறது. நோய்களின் அறிகுறிகளைத் தற்காலிகமாகத் தடுத்து நிறுத்தி, அவற்றை அமுக்கி வைக்கும் முயற்சிகளில் மட்டுமே வெற்றி கண்டுள்ளது இன்றைய மருத்துவம். ஆனால், செல் தெரபி மருத்துவத்தில் மட்டுமே நோய்களிலிருந்து மனிதனை முழுமையாகக் காப்பாற்றவும், நோய்கள் அண்டிடாது பாதுகாக்கவும் முடியும் என்பது உலகம் முழுவதுமாக நிரூபிக்கப்பட்டு வரும் உண்மை. அதனால்தான் 'யாமறிந்த மொழிகளிலே' என்பது போல 'யாமறிந்த மருத்துவங்களிலே... செல் தெரபி போல சிறப்பானது வேறொன்றுமில்லை!' என்று வைகை நதிக்கரையில் அமைந்து, இவ் வையகத்துக்குப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது எங்கள் நிறுவனம். ○

கடந்த மூன்றாண்டுகளில் மட்டும் நானூறு செல் தெரபி மருத்துவர்கள் உருவாகியுள்ளனர்.

வந்து பயில்கின்றனர். இங்கு பயின்றவர்களில் ஏழு பேர், செல் தெரபி குறித்து ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றுள்ளனர். தற்போது மேலும் பத்து பேர் முனைவர் ஆய்வில் ஈடுபட்டுள்ளனர். கடந்த மூன்றாண்டுகளில் மட்டும் நானூறு செல் தெரபி மருத்துவர்கள் உருவாகியுள்ளனர். அவர்கள் இன்றைக்கு உலகம் முழுவதும் செல் தெரபி மருத்துவர்களாகப் பணிபுரிந்து வருகின்றனர். அவ்வளவு ஏன்? ஆங்கில மருத்துவப் பட்டம் பெற்று,



செல் தெரபி மருந்துகள் அனைத்துமே ரசாயனக் கலவைகள் அல்லாதவைகள். இயற்கை சார்ந்தவைகள். பக்க விளைவுகளைத் தராதவைகள். இதற்கான மருத்துவர்களை உருவாக்குவதே நம்முடைய நோக்கம்.



நோய் நாடி...

செல்களை ஆரோக்யமாக வைத்திருப்பதே நோயற்ற வாழ்வுக்கு மிகவும் உகந்தது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே நமது ஞானிகள், யோகிகள், முனிவர்கள், சித்தர்கள் இதைத் தான் போதித்து வந்துள்ளனர். 'நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செயல்' என்பது வள்ளுவர் வாக்கு.

### விடிவெள்ளி செல்தெரபி!

உண்ணும் உணவு, குடிநீர் மற்றும் சுற்றுப்புறச் சூழல் வாயிலாக நச்சுக்களும், அசுத்தங்களும் நம் உடலில் உட்புகுந்து விடுகின்றன. அவற்றைச் சாப்பிட விரும்பும் விருந்தாளிகளாக பேக்டீரியாக்களும், வைரஸ்களும் அப் பகுதிகளில் பிரவேசிக்கின்றன. இந்நிலையில் நம் உடலில் இயற்கை சக்தியான நோய் எதிர்ப்புச் சக்திகளுக்கும் நச்சுக் கிருமிகளுக்கும் இடையே ஒரு பெரும் போரே நிகழ்கிறது. இந்த யுத்தத்தில் நோய் எதிர்ப்பு சக்திகளின் ஆற்றல் குறைந்து நச்சுக் கிருமிகளின் ஆதிக்கம் அதிகரிக்கும்போது நமக்குள் நோய் உருவாகிறது. அப்போது உடலின் செல்கள் பலவீனமடைகின்றன. செல் தெரபி மருந்துகள் மட்டுமே செல்களுக்குள் ஊடுருவிச் சென்று (ICP - Intra Cellular Permiability) செல்களைச் சீர்படுத்தி, மனித உடலை நோய்களிலிருந்து முழுமையாக விடுவிக்கின்றன. மருத்துவ உலகின் விடிவெள்ளி செல்தெரபி என்றும் கூறலாம்.

# எப்படி?



### தானியங்கி மருத்துவம்:

நம் உடலுக்குள் செல்தெரபி மருந்துகள் பயணம் செய்து, உடலின் எல்லாப் பாகங்களிலும் எல்லா செல்களிலும் ஊடுருவுகிறது. பாதிக்கப்பட்ட பழுதான செல்களை தானாகவே கண்டுபிடிக்கிறது. 'உன்னை உய்விக்க வந்துள்ள அடியேன் நானென' அறிமுகப்படுத்திக் கொண்டு, அவற்றை சீர் செய்கிறது. இதன் விவரங்களையும் அவ்வப்போது உடல் உறுப்புகளின் பிரதிபலிப்புகள் மூலமாக நமக்கு உணர்த்துகிறது. கைப்பணம் செலவழித்து என்னை உள்ளே அனுப்பி வைத்தீர்கள். நான் ஒன்றும் சும்மா இல்லை என்று Project Report சமர்ப்பிக்கிறது. செல்களை சீர்படுத்திவிட்டு நச்சுக் கிருமிகளை மலம், சிறுநீர், சளி மற்றும் தும்மல் வாயிலாக வெளியேற்றுகிறது. நம் உடலுக்குள் தானியங்கிகளாக செல்தெரபி மருந்துகள் செயல்படுகின்றன. ○

# எப்படி?

தெரியுமா?

# மும்மூர்த்திகளாகும் செல்கள்!

பழைய செல்கள் அழிந்து புதிய செல்கள் உருவாவது சதா சர்வ காலமும் நம் உடலுக்குள் நிகழ்ந்துக் கொண்டிருக்கும் வளர்சிதை மாற்றம். ஆக்கல், காத்தல், அழித்தல் எனும் முப்பெரும் நிகழ்வுகள் மறைந்திருந்து செயல்பட்டுக் கொண்டேயிருக்கின்றன!

## செல்களுக்கென்ன வேலை?

மனித உடலில் மூளையில் உள்ள செல்களைத் தவிர மற்ற அனைத்து உறுப்புகளிலும் உள்ள செல்கள் ஒவ்வொன்றும் நிமிடத்துக்கு நிமிடம் மாற்றம் பெற்றுக் கொண்டேயிருக்கின்றன. குறிப்பாக தோலில் உள்ள செல்கள் அனைத்தும் மூன்று மணி நேரத்துக்கு ஒருமுறை மாறுகின்றன. மற்ற உறுப்புகளில் உள்ள செல்கள் அனைத்தும் நூற்றிருபது நாட்களுக்கு ஒருமுறை மாற்றம் கொள்கின்றன. செல்களில் பழையது ஒன்று அழியும்போது அந்த நேரத்தில் அங்கே புதிய செல் ஒன்று உருவாகி விடுகிறது.



## எத்தனை கோடி செல்கள்...?



'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா?' என்பது போல, 'எத்தனை கோடி செல்கள் வைத்தாய் இறைவா?..' என்று கேட்கலாம். மனித உடல் என்பது எழுபது டிரில்லியன் செல்களால் ஆனது. நம்மை கொஞ்சம் 'டிரில்' வாங்கும் கணக்கு இது. பத்து லட்சம் எண்ணிக்கை கொண்டது ஒரு மில்லியன். ஆயிரம் மில்லியன் கொண்டது ஒரு பில்லியன். ஆயிரம் பில்லியன் கொண்டது ஒரு டிரில்லியன். அப்போ எழுபது டிரில்லியன்? என்ன... தலைச்சுற்றல் வருகிறதா! நேராக விஷயத்துக்கு வந்து விடுவோம். நம்முடைய உடல் எழுபது லட்சம் கோடி செல்களால் ஆனது!

அம்மாடியோவ்...!

## குண்டூசியின் தலையில்...

நம் பார்வை என்ன... அதி நுட்ப பார்வையா? செல்களை நாம் பார்த்து நலம் விசாரிக்க முயற்சி செய்வதற்கு நோ சான்ஸ். உங்கள் கையில் வைத்திருக்கும் ஒரு குண்டூசியின் கொண்டை மீது சுமார் ஒன்னரை லட்சம் செல்கள் ஒய்யாரமாக உட்கார்ந்திருக்கும் என்றால், நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்!







# ரிஷியைத்

ரிஷி காளான் கொண்டு தயாரிக்கப்படும்
மலேசியன் மருந்து, ஜெர்மன் மருந்து, இங்கிலாந்து மருந்து, அமெ
மருந்து. இந்த நான்கு வகை மருந்துப் பொருட்களின் சங்கமமே செ
மருத்துவம். பொதுவாகவே செல் தெரபி மருந்து உபயோகிப்பாளர்கள்
மூளைத் திறனும் அதிகம் பெற்றிருப்பதாகக் கூறப்படுகிறது.

ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக சீன தேசத்து மன்னர்களுக்கும் குடும்பத்
காளான்கள் நிறையவே தேவைப்பட்டனவாம். இந்த ரிஷி காளான்கள் விளை
காளான், குடைக் காளான் மற்றும் உணவுக் காளான் போல அல்ல. பனி பட
உள்ளே மின்னல் வெட்டும் போது மட்டுமே விளையக் கூடியது ரி

இவைகளைக் கொணர்வதற்கு சீன தேசத்து மன்னர்கள் ஓர் ஏற்பாடு செய்த
250 ராணுவ வீராங்கனைகள் அனைவரும் ஒரு கப்பலில் ஏற்றி விடப்பட்டனர்.
பின்னர் கப்பல் ஓரிடத்தில் தரை தட்டி நின்றது. கப்பலை அங்கேயே நி
அனைவரும் நிலப்பரப்பின் மீது விரைந்து சென்றனர். மலைப் பிரதேசங்களி
வேட்டையில் அவர்களுக்கு நிறைய்ய... நிறைய்ய... ரிஷி காளான்க

பெரும் மூட்டைகளாகச் சுமந்துகொண்டு கடற்கரைக்கு வந்து சேர்கின்றனர்.
காணவில்லை. அந்த நிலப்பரப்பிலேயே அனைவரும் தங்கி விடுகின்றனர். அ
உணவுப் பற்றாக்குறையின் போது ரிஷி காளான்களை உணவாக உட்கொ
அவர்கள் அனைவருமே பேரறிவும், பெரும் திறனும் பெற்று வாழ்ந்தன
நிலப்பரப்புதான் தற்போதைய ஜப்பான் என்று
சொல்லப்படுகிறது. o

# தேடி...




க்கன்
தெரபி
டல் பலமும்,

னர்களுக்கும் ரிஷி
பது நம்மூரில் மழைக்
ந்த மலைக் காடுகளின்,
காளான்கள்!

ர். 250 ராணுவ வீரர்கள்,
சில மாதப் பயணத்துக்குப்
த்தி வைத்துவிட்டு,
பல நாட்கள் தேடுதல்
கிட்டின.

அங்கு கப்பலைக்
புறம் என்ன?
ன்றனர்.
அந்த

**ம**லைப் பிரதேசங்களில், பல நாள் தேடுதல் வேட்டையில் அவர்களுக்கு நிறைய்ய்ய... நிறைய்ய்ய.. ரிஷி காளான்கள் கிட்டின!



பயனாளிகள்...

# “மனிடரில்...

செ
ன்னை திருமுல்லைவாயல் பகுதியில் வசித்தவர் கிருஷ்ணவேணியம்மாள். வயது எழுபத்தியாறு. பார்வை மங்கலாகத் தெரிகிறது. கண் மருத்துவப் பரிசோதனை செய்யப்படுகிறது. ரத்தத்தில் சர்க்கரை அளவு இருநூற்று எண்பதாக இருப்பதால், கண் அறுவை சிகிச்சை செய்வதில் சிக்கல். செல் தெரபி மருந்துகள் மூலமாக சர்க்கரை அளவு சமச்சீராக்கப்படுகிறது. கண் அறுவை சிகிச்சைக்குச் செல்கிறார். கண்ணாடி அணிந்து கொள்கிறார். தற்போது பார்வையும் நன்றாகத் தெரிகிறது. ரத்தத்தில் சர்க்கரையின் அளவும் சமச்சீராக இருந்து வருகிறது.

“இனிப்புப் பண்டங்களைப் பார்த்தாலே நாக்கு ருசி தேடுகிறது. அதனைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அதனால் இனிப்பும் அவ்வப்போது சாப்பிட்டு வருகிறேன். இரண்டு மாதத்துக்கு

• கிருஷ்ணவேணியம்மாள்





## நச்சுக் கிருமி!

ஸ்ரீரங்கத்தில் வசிப்பவர் டாக்டர் கே.வசந்தா. திருச்சி பாய்லர் ஆலை மருத்துமவனையில் சீஃப் மேட்ரன்-ஆக நாற்பதாண்டுகள் பணியாற்றியவர். தற்போது முழு நேர செல் தெரபி மருத்துவர்.

“ஒரு வயது முதல் ஐந்து வயது வரை உடலில் TOXIN நச்சுக் கிருமி இருக்காது. ஐந்து வயதுக்கு மேற்பட்ட உடலில் நச்சுக் கிருமி அவசியம் இருக்கும். அந்த நச்சுக் கிருமிகள் தானாக வெளியேற வாய்ப்பின்றி நம் உடலுக்குள்ளேயே பயணிக்கும். அவைகளை வெளியேற்றுவதே செல் தெரபி மருத்துவம். நாற்பது வருடங்களாக நான் என் பணிக்காலத்தில் ஆங்கில மருந்துகளைத்தான் எல்லோருக்கும் பயன்படுத்திக் கொண்டிருந்தேன். கடந்த மூன்றாண்டுகளாக சிகிச்சைக்காக என்னிடம் வருபவர்களுக்குச் செல் தெரபி மருத்துவம் மட்டுமே பார்த்து வருகிறேன்!” என்று பெருமையுடன் கூறுகிறார் டாக்டர் வசந்தா.

# "...எண்கள் இல்லை!"



* முகமது இஸ்மாயில்

ஒருமுறை ரத்தத்தில் சர்க்கரை அளவினைப் பரிசோதித்துக் கொள்கிறேன். கடந்த இரண்டு வருடங்களாக சர்க்கரை எனக்குள் சமச்சீராக இருந்து வருகிறது. அதனால் சர்க்கரைக்கான செல் தெரபி மருந்துகளை படிப்படியாகக் குறைத்துக் கொண்டே வந்து விட்டேன்!"

கடந்த ஐந்தாண்டுகளாக செல் தெரபி மருத்துவப் பயனாளியாக வாழ்ந்து வருபவர் முகமது இஸ்மாயில். ஒரு மூத்த பத்திரிகையாளர். தற்போது மதுரையில் விளம்பர நிறுவனம் ஒன்றினை நடத்தி வருபவர். தன் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்கிறார்.

"இளம் பருவத்திலிருந்து புகை பிடிக்கும் பழக்கம். எந்தவொரு காரியத்தையும் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று 'தள்ளிப் போடும்' மனோபாவம். பசி - ருசி அறிந்திடாத ஏகாந்தம். இது போன்ற பல விரும்பாதவைகள், என் உடல் மற்றும் உள்ளக் குடிலின் விருந்தாளிகள். செல் தெரபி மருத்துவத்துக்கு என் உடலை உட்படுத்திக் கொண்ட பின்னர், படிப்படியாக சில 'வேண்டாதவைகள்' என் உடலிலிருந்தும், உள்ளத்திலிருந்தும் இயற்கையாகவே வெளியேறிச் சென்றுவிட்டன.

இன்று நான் புகை பிடிப்பதில்லை. சோம்பலுக்கு விடையளித்து, புத்துணர்வின் தோழனாய் மாறிப் போனேன். பசி உணர முடிகிறது. ருசியும் உணர முடிகிறது.

சமீபத்தில் என்னுடைய ரத்த அழுத்தம் உயர் அளவினைக் காட்டிட, அந்த மானிட்டரில் அதற்கு மேல் எண்களே இல்லை. இத்தனை 'ஹை பி.பி.' இருந்தும் எவ்வாறு உங்களால் சாதாரணமாக இயங்க முடிகிறது என்று மருத்துவர்களே வியந்து போயினர். ஒருவர் செல் தெரபி மருந்துகள் உட்கொண்டு வந்தால், அது உடலின் நோய் எதிர்ப்பாற்றலை எப்போதும் அதிகரித்து வைத்திருக்கும். அதனால் அந்த நேரத்தில் 'ஹை பி.பி.' கூட என் உடல்நிலையைப் பெரிதும் தாக்கவில்லை என்பதே நான் உணர்ந்து கொண்ட உண்மையாகும்!" எனக் கூறுகிறார் முகமது இஸ்மாயில்.



## தூதுவன்!

ஆரணியில் பிறந்து வசிப்பவர். ஆடிட்டராகத் தன் வாழ்க்கையைத் துவக்கியவர். செல் தெரபி மருத்துவத்தில் பேராசிரியராகவும் செயல்பட்டு வரும் டாக்டர் தனுஷ்கோட்டி, அம்மா கல்வி அறக்கட்டளையின் செயலாளரும் கூட.

"நோய் நமக்கு எதிரியல்ல. நம் உடலின் உறுப்புகளில் ஏற்படும் மாற்றங்களை (அறிகுறிகளை) நமக்கு உணர்த்துகின்ற தூதுவன். 'இந்த உறுப்பு கொஞ்சம் சரியில்லை. அதனைச் சீர்படுத்திக் கொள்' என்று தகவல் தரும் தோழன் என்பதே செல்தெரபி மருத்துவத்தின் அடிப்படை!"



சிகிச்சை...

எங்களிடம் சிகிச்சைக்கு வரும் பெரும்பாலான நோயாளிகள் மற்ற மருத்துவ முறை கைவிடப்பட்ட நிலையில்தான் வருகிறார்கள். சிகிச்சையின் முதல் கட்டமாக நாங்கள் தரும் மருந்துகள் அந்த நோயாளியின் உடலில் படிந்துள்ள மற்ற மருந்துகளின் நச்சுத் தன்மைகளை நீக்கும் பணியைச் செய்கின்றன. அடுத்ததாக பழுதடைந்த உறுப்புகளின் செல்களை சீராக இயங்கச் செய்கிறது. அந்த உறுப்புகளைச் சீராக இயங்கச் செய்து பின்னர் அந்த நோய் மீண்டும் வராமல் நிரந்தரமாக மறைந்து போக மருந்துகளைத் தருகிறோம். இதனால் நோயாளியின் ஆரோக்கியமும் நோய் எதிர்ப்புச் சக்தியும் கூட்டப்படுகிறது.

இந்தச் சிகிச்சையில் பத்தியம் ஏதும் கிடையாது. தவிர்க்க இயலாமல் மற்ற மருந்துகள் உட்கொள்ள வேண்டியதாக இருந்தாலும் அந்த மருந்துகளோடு எங்கள் செல் தெரபி மருந்துகளையும் சேர்த்து சாப்பிடலாம். இது மற்ற மருந்துகளின் பக்க விளைவுகளைக் கட்டுப்படுத்துகிறது.

இந்த செல் தெரபியின் வெற்றிக்கு மேலும் ஒரு காரணம் உண்டு. நமது உடலில் உள்ள உறுப்புக்கள் எல்லாம் எல்லா நேரங்களிலும் ஒரே மாதிரியாக வேலை செய்வதில்லை. அவைகளுக்குள் ஒரு கூட்டு ஒப்பந்தமே உண்டு. ஒவ்வொரு உறுப்புகள் செயல்படும் சரியான நேரத்தைத் தேர்வு செய்து, மருந்தை சரியான அளவில் நாங்கள் தருவதால் அந்த உறுப்பை சீக்கிரம் சரி செய்வதில் சிரமம் ஏற்படுவதில்லை. இந்த அணுகுமுறையை வேறு எந்த மருத்துவ முறையிலும் கடைபிடிப்பதாகத் தெரியவில்லை.

ஒரு சர்க்கரை நோயாளி, பல ஆண்டுகளாக மற்ற மருந்துகளை எடுத்துக் கொண்டிருப்பவர், கடைசியாக எங்களிடம் வருவதாக வைத்துக் கொள்வோம். அவருக்கு பல பக்க விளைவுகள் என்ற பெயரில் பல நோய்களும் தோன்றியிருக்கும். கை, கால் மதமதப்பு, தாம்பத்தியத்தில் ஈடுபாடு குறைந்திருப்பது, சாப்பிட்டவுடன் சிறிது நேரம் படுக்கச் செய்வது, இரவில் அடிக்கடி சிறுநீர் கழிப்பது, மனநிலை



கூட்டு



டாக்டர் ஜி.மணி

பாதிப்பு, தலை சுற்றல் போன்றவைகள் இருக்கலாம். இவை யாவும், பல ஆண்டுகளாகத் தொடர்ந்து மற்ற மருந்துகளை எடுத்ததின் விளைவுகள் என்பதே உண்மையாகும். இவர் எங்களிடம் வந்த உடனேயே இவர் எடுத்துக் கொள்ளும் எந்த மருந்தையும் நாங்கள் உடனே நிறுத்தச் சொல்வதில்லை. எங்கள் மருந்துகளை இவர் ஏற்கெனவே எடுத்து வரும் மருந்துடன் சேர்த்தே எடுத்துக் கொள்ளச் சொல்கிறோம். பின்னர் ஒரிரு வாரங்கள் கழித்து இவரது உடல் நிலையில் முன்னேற்றங்கள் தெரிய ஆரம்பித்த பின்னர், கொஞ்சம் கொஞ்சமாக இவரது மற்ற மருந்துகளின் அளவைக் குறைக்கச் சொல்லி, மேலும் சில மாதங்கள் கழித்து மற்ற மருந்துகளை முழுவதுமாக நிறுத்தச் சொல்வோம். இவ்வாறாக இவர் சர்க்கரை நோயுடன் போட்டுக்கொண்ட ஆயுட்கால ஒப்பந்தத்தை ரத்து செய்கிறோம்.

இங்கே ஆயுட் கால ஒப்பந்தம் என்று குறிப்பிட்டதற்கு காரணம், இன்றைய நாகரிக உலகில், நமது ஜீவ உறுப்புகள் சம்பந்தப்பட்ட எந்த நோயானாலும், (அது சம்பந்தப்பட்ட சிறப்பு மருத்துவர்கள்) அந்த நோய்க்கு ஆயுட் காலம் முழுவதும் மருந்து சாப்பிட வேண்டும், எக்காரணம் கொண்டும் மருந்தை நிறுத்தவே கூடாது என்ற நிலை, நோயாளிகளை ஆயுட்கால ஒப்பந்தத்தில் ஈடுபடுத்திவிடுகிறது. உதாரணமாக இருதய, நுரையீரல் நோய்கள், தைராய்டு பிரச்னைகள், நரம்பு, புற்று, கல்லீரல் நோய்கள், பெண்களின் பிரச்னைகள், தோல், வலிப்பு நோய்கள், கிட்னி பிரச்னைகள், ஆண் பெண் மறைமுகப் பிரச்னைகள், மன நோய்கள் போன்ற பல நோய்களுக்கு ஆயுட்கால ஒப்பந்த முறையே கடைபிடிக்கப்படுகிறது. ஆனால் செல் தெரபியில் அந் நோய்களை சில மாத கால சிகிச்சைகளிலேயே நல்ல தீர்வுக்கு கொண்டு வருகிறோம்.

இந்த செல் தெரபியின் மூலம் ஒரு நோயை தீர்க்க



# ஒப்பந்தம்!





**எந்த வயதினர்க்கு...**

## எந்த வயதினர்க்கு செல் தெரபி?

எல்லா வயதினர்க்கும் ஏற்றது செல் தெரபி. குழந்தைகளுக்கு மட்டும் என்றோ, இதற்கென 'ஏ' 'யு' 'ஏயு' என்றோ, எந்தத் தணிக்கையும் கிடையாது. அனைத்து வயதினர்க்கும் தடையில்லாச் சான்று பெற்றது இந்த மருத்துவம். பிறந்த ஒருநாள் குழந்தை முதல் வயோதிகர் வரை அவரவர்களுக்கு செல்லுபடியாகும் மருத்துவமே செல் தெரபி.

**ஒன்றல்ல, நான்கு!**

செல் தெரபி எனப்படும் மாற்று மருத்துவம் நான்குவித மருத்துவமுறைகளைக் கொண்டது. காளான் மருத்துவம், மலர் மருத்துவம், பயோ(அல்) திசு மருத்துவம், இயற்கை மருத்துவம். இந்த நான்கு மருத்துவ முறைகளிலும் பக்க விளைவுகளோ, பின் விளைவுகளோ, எதிர் விளைவுகளோ கிடையாது. அதனால் எந்த வயதினருக்கும் மாற்று மருத்துவ முறையில் சிகிச்சை அளிக்கலாம்.

முடியவில்லையெனில் வேறு எங்கேயும் அந்த நோய்க்கான தீர்வு இல்லை என்றே உறுதியாக நம்புகிறோம். தீர்வு என்று ஒன்று இல்லாமல் உலகில் எந்தப் பிரச்னையையும் இறைவன் படைத்ததில்லை. ''இந்த நோய்க்கு தீர்வே கிடையாது, ஆயுள் முழுவதும் நீங்கள் மருந்துகளை எடுத்துக் கொண்டே இருக்க வேண்டும்'' என்று கூறுவது, இறைவனின் படைப்பின் ரகசியத்தை அறியாத அவல நிலையே ஆகும். செல்தெரபியில் அனைவருக்கும் நோயற்ற வாழ்வு உண்டு. அனைத்து நோய்களுக்கும் தீர்வு உண்டு.



மேலும், செல்களை சரி செய்து கொண்டு அதன் மூலம் அனைத்து உறுப்புகளின் இயக்கங்களை சரி செய்து கொள்வது என்பது, நோயுற்றவர்களுக்கான மருத்துவம் மட்டும் அல்ல. ''எனக்கு எந்த நோயும் இல்லை, நான் நல்ல ஆரோக்கியமாக இருக்கிறேன்'' என்று நம்பிக் கொண்டு, உடம்புக்குள்ளே நமக்கே தெரியாத நிலையில் பல நோய்களை உள்ளுக்குள் வளர்த்துக் கொண்டிருக்கும், அனைத்து மக்களுக்குமான ஒரு வரப்பிரசாதமே செல்தெரபி என்பது.

**"தீர்வு என்று ஒன்று இல்லாமல் உலகில் எந்தப் பிரச்னையையும் இறைவன் படைத்ததில்லை!"**

பயணாளிகள்...

# இழு... இழுக்குதே...

**ரா**ஜேந்திரனுக்கு வளைகுடா நாட்டில் தனியார் கம்பெனியில் வேலை. அவருக்கு ஒரு பழக்கம். எந்த ஒரு காரியத்தைச் செய்தாலும், அதில் ஆழ்ந்து போய் விடுவது. புகைப்பிடிக்கும் பழக்கத்துக்கு ஆளானவர், 'செயின் ஸ்மோக்கராகவே' மாறிப் போனார். அதனால் கம்பெனி வேலையில் ஈடுபாடு மிகவும் குறைந்தது.

'உங்கள் மகனை கம்பெனி டிஸ்மிஸ் செய்துவிட்டது. இரண்டு லட்ச ரூபாய் நஷ்ட ஈடு கட்டிவிட்டு அழைத்துச் செல்லவும். இல்லையேல் உங்கள் மகனை எங்கள் நாட்டின் போலீசிடம் ஒப்படைக்க வேண்டி வரும்!' என்று அவனது பெற்றோருக்குக் கடிதம் வந்தது. பதறிப் போனது குடும்பம். வேறு வழியின்றி பணத்தைக் கட்டிவிட்டு மகனை சொந்த ஊருக்கு அழைத்து வந்தனர்.

திருமணம் செய்து வைத்தால் சரியாகி விடுமென நினைத்து, உறவில் ஒரு பெண்ணையும் மணம் முடித்து வைத்தார்கள். ஆனால் விதி வேறு விதமாக விளையாடியது. ராஜேந்திரனால் தாம்பத்ய சுகத்தில் ஈடுபடவே முடியவில்லை. பிரச்னை விஸ்வரூபம் எடுத்தது. பல மருத்துவர்களை நாடினார்கள். மாற்றம் ஏதும் ஏற்படவில்லை. என்னதான் செய்வது?

**செ**ல் தெரபி எனப்படும் மாற்று மருத்துவ முறையைக் கேள்விப்பட்டு, இந்தியன் செல் தெரபி இன்ஸ்டிட்யூட்டின் டாக்டர் ஜிமணியைச் சந்திக்கிறார்கள். மன நல மருத்துவருமான அவர், செல் தெரபி முறையில் ராஜேந்திரனுக்கு மருத்துவம் பார்க்கிறார். பாக்கெட் பாக்கெட்டாக சிகரெட் ஊதித் தள்ளியவர், தினசரி மூன்று சிகரெட்டுக்குள் அடங்கி விடுகிறார். மனைவியிடம்



அன்புடனும் அக்கறையுடனும் பழக முடிகிறது. தற்போது நல்ல வேலைக்கும் சென்று வருகிறார்.

### வியாதி போனது; விசா வந்தது!

இருபத்தியிரண்டு வயது இளைஞர். பெயர் இப்ராஹிம். ஊர் அறந்தாங்கி. ஊருக்குள் அவரது வயது இளைஞர்களில் பாதிப் பேர் வெளிநாட்டு வேலைக்கு விமானம் ஏறிவிட்டனர். இருப்புக் கொள்ளவில்லை அந்த இளைஞருக்கு. வீட்டில் நச்சரித்துப் பணம் பெற்று பாஸ்போர்ட் எடுத்து விசாவுக்கு விண்ணப்பித்தார். ஹெபடைடிஸ் பி பாசிடிவ் அவரது உடலில் இருப்பதாக மருத்துவ அறிக்கை வெளிப்படுத்தியது. ஹெபடைடிஸ் பி என்பது கல்லீரலில் பி வைரஸ் பரவியிருப்பது ஆகும். இதற்கு சரியான மருத்துவமும் இல்லை. மெள்ள மெள்ள மரணத்தை நோக்கி நகர வேண்டியதுதான். திருச்சி, மதுரை, கோவை, சென்னை என பல நகரங்களின் லேப்களில் பரிசோதித்துப் பார்த்தார். அனைத்து மருத்துவ அறிக்கைகளுமே ஹெபடைடிஸ் பி பாசிடிவ் என்றே குறிப்பிட்டது. மலேசியா செல்ல விசா கிடைக்கவில்லை.

## வெற்றிக்குப் பின்னால்...

வெற்றி பெறும் ஒவ்வொரு ஆணுக்குப் பின்னாலும் ஒரு பெண்மணி இருப்பாள் என்பர். டாக்டர் ஜி.மணி அவர்களின் ஒவ்வொரு செயல்பாடுகளுக்கும் பின்னால் இருந்து ஊக்குவித்தது, அவருக்கு வழிகாட்டியாக இருந்தவர் டாக்டர் கி.கண்ணம்மாள். அவர் அம்மா கல்வி அறக்கட்டளையின் துணைத் தலைவராக இருந்த செயல்பட்டு வருவதோடு மாணவர்களுக்கு பரிவு காட்டி உபசரிப்பு செய்வதிலும் சிறந்து விளங்குகிறார்.

பலவிதங்களில் பணம் செலவழித்து சோர்ந்து போனது அந்தக் குடும்பம். செல் தெரபி மருத்துவம் குறித்துக் கேள்விப்பட்டு, மதுரை வந்தார்கள். டாக்டர் ஜி.மணி அவர்களின் மருத்துவ ஆலோசனையின் பேரில், இப்ராஹிம் ஐந்து மாத சிகிச்சை எடுத்துக் கொண்டார். பின்னர் முன்பு பரிசோதித்துக் கொண்ட அதே மருத்துவமனைகளின் லேப்களில் தன் உடல் நிலையைப் பரிசோதித்துப் பார்த்தார்.

என்ன ஆச்சர்யம்! ஹெபடைடிஸ் பி பாசிட்டிவ் என்றிருந்த நிலை, நெகட்டிவ் ஆக மாற்றம் பெற்றிருந்தது. உடல் நிலையும் சீராகிவிட்டது. அப்புறம் என்ன? மறுபடி விசா! இப்பொழுது அந்த இளைஞர், மலேசியன் கம்பெனியொன்றில் வேலை செய்து கொண்டிருக்கிறார்! ○

• விருது பெறும் டாக்டர் ஜி.மணி



தொகுப்பு : ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு
படங்கள் : மதுரை டி.எம்.பாலசந்தர்

+16

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

6.5.2007
இதழுடன்
இணைப்பு
16 பக்கங்கள்





# செல் தெரபி...



இணைந்து வழங்குவோர்:




Indian Celltheraphy Institute

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under
PMGs Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki Issue Dated 6.5.2007

